உ

முருகா

# திருப்புகழமிர்தம்

## பொருளடக்கம்





### பிற கட்டுரைகள்



---

### திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| இந்தியா & இலங்கை | ரூ. | 2—0—0 |
| மற்ற நாடுகள் | ரூ. | 3—0—0 |
| தனிப்பிரதி (கைவசமிருந்து கிடைக்குமாயின்) | ரூ. | 0—3—0 |

உ

முருகா

# திருப்புகழமிர்தம்

## பொருளடக்கம்





பிற கட்டுரைகள்



---


**திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா விவரம்**

| | |
|---|---|
| இந்தியா & இலங்கை | ரூ. 2—0—0 |
| மற்ற நாடுகள் | ரூ. 3—0—0 |
| தனிப்பிரதி (கைவசமிருந்து கிடைக்குமாயின்) | ரூ. 0—3—0 |

**Statement about ownership and other particulars about**

## Thiruppugal Amirtham

Form IV

**( Rule 8 )**

1. Place of publication: Madras.
2. Periodicity of its publication: Monthly.
3. Printer's Name: Sri M. Madhusoodana Sivam.
   Nationality: Indian.
   Address: 144, Swaminaicken Street, Chintadripeta, Madras-2.
4. Publisher's Name: M. Madhusoodana Sivam.
   Nationality: Indian.
   Address: 144, Swaminaicken Street, Chintadripeta, Madras-2.
5. Editor's Name: Sri Kirupanandavari.
   Nationality: Indian.
   Address: 144, Swaminaicken Street, Chintadripeta, Madras-2.
6. Names and addresses of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital: M. Madhusoodana Sivam, 144, Swaminaicken Street, Chintadripeta, Madras-2.

I, M. Madhusoodana Sivam, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date: 10th March 1957

(Sd.) **M. Madhusoodana Sivam,**
Signature of Publisher.

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் குள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"


மலர் 21 | துன்முகி ஆண்டு சித்திரைத் திங்கள் ஏப்ரல்-1956 | இதழ் 1


## திருப்புகழ்

### திருச்செந்தூர்

பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்திந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக்குன்றத் தனமானர்

பரிக்குந்துற் சரக்கொன்றத்
திளைத்தங்குற் பலப்பண்பைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்

துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்புற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனைத்

துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தந்திப் படியாள்வாய்

தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரர்க்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்

சமர்க்கெஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே

திருக்கஞ்சத் தனைக்கண்டித்
துறக்கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன்றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே

செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே.

## பதவுரை

தரு தங்கு அ பொலத்து அண்டத்தினை கொண்டு - கற்பக மரந் தங்கியுள்ள அந்த அழகிய பொன்னுலகத்தைக் கவர்ந்துகொண்டு, அ சுரர்க்கு- அத்தேவர்கட்கு, அஞ்ச - அஞ்சுமாறு, தட துன்பத்தினை தந்திட்டு எதிர் - பெரிய துன்பத்தைத் தந்து எதிர்த்துப் போர் செய்த, சூரன் - சூரபன்மன், சமர்க்கு எஞ்சி - போரில் வலிமை குன்றி, படிதுஞ்ச - இப் பூமியில் மடியுமாறு, கதிர்துங்கத்து அயில் கொண்டு- ஒளியும் தூய்மையும் உடைய வேலாயுதத்தைக் கொண்டு போர் புரிந்து, அ தலத்து உம்பர் பதிக்கு அன்பு உற்று அருள்வோனே - அந்த மேலுலகத்தில் தேவர் கோமானுக்கு அன்பு செய்து அருள் செய்தவரே! திரு கஞ்சத்தனை கண்டித்து – அழகிய தாமரையில் வாழ்கின்ற பிரமதேவனைக் கண்டனஞ் செய்து, உற - நன்மையுறு மாறு, கம் குட்டிவிட்டும் - தலையில் குட்டிச் சிறையில் விடுத்து, சத் சிவற்கு அன்று அப்பொருள் கொஞ்சி பகர்வோனே – உத்தமமான சிவ மூர்த்திக்கு அந்நாள் அந்தப் பிரணவத்தின் பொருளை மழலை மொழியுடன் கொஞ்சி உபதேசித்தவரே! செயதுங்க – வெற்றித் தூய்மையும், கொடைதுங்க - கொடைத் தூய்மையும், திரு - தெய்வீக மும், தங்கி தரிக்கும்பொன் - நிலைபெற்று விளங்கும் அழகிய, திருச் செந்தில் பதி - திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, கந்த - கந்தக் கடவுளே! பெருமாளே – பெருமையின் மிக்கவரே! பரு தந்தத்தினை தந்திட்டு-பெரிய யானைக்கொம்பு போல் இருந்துகொண்டு, இருக்கும் கச்சு அடர்த்து - தரித்துக்கொண்டுள்ள கச்சைக் கிழித்து, உந்திப் பருக்கும் பொன் ப்ரபை குன்ற தனமானர் – உயர்ந்து பருத்துள்ள பொன் மயமான மலை போன்ற தனங்களையுடைய விலைமகளிர், பரிக்கும் துற் சரக்கு ஒன்ற இளைத்து - கொடுமையைத் தாங்கும் கணைக்கு நிகராக விளங்கி, அங்கு உற்பல பண்பை பரக்கும் - அங்கே



நீலோற்பலத் தன்மையையும் தோற்கவைத்து, சக்கரத்தின் சத்தியை நேரும் - சக்ராயுதம் வேலாயுதம் என்ற இரு ஆயுதங்களை யொத்து, துரை செங்கண் கடைக்கு ஒன்றி - வேகமாகப் பாயுந் தன்மையுள்ள சிவந்த கடைக்கண்களுக்கு இலக்காகி மயங்கி, பெருத்த அன்பு உற்று - பெரிய ஆசை வைத்து, இளைத்து - அதனால் இளைப்புண்டு, அங்கு துணிக்கும் புத்தியை சங்கித்து அறியேனை – அவ்விடத்தில் துண்டிக்கப்பட்ட புத்தியைப் பெற்று பலரையும் ஐயங்கொண்டு அறியாமையால் மூடிய நாயேனை, துணை செம்பொன் பதத்து இன்பு உற்று - தேவரீருடைய சிவந்த பொன் போன்ற இரண்டு திருவடி களில் இன்பமெய்தி, எனக்கு என்று அ பொருள் தங்க-அடியேனுக்கு என்று தனிப்பட்ட முறையில் உண்மைப் பொருள் தங்க, தொடுக்குஞ் சொல் தமிழ் தந்து - நல்ல பதங்களை வைத்து தொடுக்கும் தமிழ்த் தனி மொழியை எனக்கு வழங்கி, இப்படி ஆள்வாய் - இப்பொழுதே ஆட்கொள்வீர்.

## பொழிப்புரை

கற்பகத் தரு தங்கியுள்ள அந்தப் பொன்னுலகத்தைக் கவர்ந்துகொண்டு தேவர்களுக்கு அச்சத்தை விளைவித்து, பெரிய துன்பத்தைத் தந்து எதிர்ந்த சூரபன்மன், போரில் வலிமை குன்றி யொழியுமாறு ஒளியும் தூய்மையும் உடைய வேற்படையைக் கொண்டு போர் புரிந்து, அந்த சுவர்க்க லோகத்தில் இந்திரனிடம் அன்புவைத்து அவனுக்கு அருள் புரிந்தவரே! அழகிய தாமரையில் வீற்றிருக்கின்ற பிரமதேவ னைக் கண்டித்து அவன் நன்மையடையும்பொருட்டு அவன் தலையில் குட்டிச் சிறையில் விடுத்து, என்றுமுள்ள பொருளா கிய சிவமூர்த்திக்கு அன்று அத்தனி மொழிப்பொருளை மழலை மொழியுடன் கொஞ்சி உபதேசித்தவரே! வெற்றித் தூய்மை யும் கொடைத் தூய்மையும் தெய்வீகமும் பொருந்தி அழகு நிறைந்த திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் கந்தப் பெரு மானே! பெருமையின் மிக்கவரே! பெரிய யானைக் கொம்புபோல் விளங்கி, தரித்துள்ள கச்சினைக் கிழித்துக்கொண்டு உயர்ந்து பருத்து பொன்மலை போல் உள்ள தனபாரங்களை யுடைய விலை மாதர்களின், கொடுமையைத் தாங்கியுள்ள கணைக்கு நிகராக நின்று, நீலோற்பல மலரை வென்று, சக்கரத்தையும் வேலை யும் போல் வேகமாகச் சென்று வாட்டுகின்ற கடைக்கண் பார்வையால் மருட்சிகொண்டு, பெரிய அவாவுற்று, அதனால் இளைத்து பிளவுபட்ட புத்தியையுடையவனாய்ப் பலரையும் சந்தேகங்கொண்டு அறியாமையோடு கூடிய சிறியேனை, தேவரீ ருடைய சிவந்த பொன் போன்ற இரு திருவடிக் கமலங்களில் இன்புறச்செய்து; எவருமில்லாத ஒரு சிறப்புடன் எனக் கென்றே அமைந்துள்ள உயர் பொருள் அமைத்துத் தொடுக் கும் இன்சொற்களுடன் கூடிய செந்தமிழையீந்து இக்கணத்தி லேயே ஆட்கொள்வீர்.

## விரிவுரை

**பருத்தந்தத்தினை.........தனமானுர்:—**

யானைத் தந்தம் போல் உயர்ந்து பருத்துக் கச்சினைக் கிழித்துச் சிறந்துள்ள தனங்களை யுடைய விலைமகளிர், தம்மை யிச்சிப்பவர்க்கு அத்தனங்களைத் தந்து தனங்களைப் பெறுவர். மலைபோன்ற தனத்தால் மலைபோன்ற தனத்தை யீட்டுவர்.

**பரிக்குந்துற்சரக் கோன்ற:—**

துன்பத்தைத் தாங்கியுள்ள கணைக்கு நிகரானது அவர் கண்கள். "சரத்துக்கு ஒன்ற" என்ற சொல் அத்துச் சாரியை கெட்டு "சரக் கொன்ற" என வந்தது.

**உற்பலப் பண்பைப் பரக்கும்:—**

உற்பலம்–நீலோற்பலம். கண்கள் நீலோற்பல மலரினும் அழகாக இருப்பதனுல் அதன் பண்பைப் பரந்துபோமாறு செய்தது என்றனர்.

**சக்கரத்தின் சத்தியை நேரும்:—**

மேலும் அக்கண்கள் சக்ராயுதம் போல் வட்டமாகவும் வேலாயுதம்போல் கூர்மையாகவும் இருக்கின்றன. ஆடவர் உள்ளத்தை வெட்டிப் பிளந்து புண்படுத்தவல்லது அக்கண்.

**துரைசேங்கட்கடை:—**

துரை - விரைவு. வேகமாகச் சென்று பாயும் இயல்புடையது அவ் விழி. துரை என்ற சொல் விரைவு என்ற பொருளில் வரும் திருவாசகத்தையுங் காண்க.

உரைமாண்ட வுள்ளொளி உத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை யிரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோணேக்கம் ஆடாமோ.

துரை என்ற சொல்லுக்குப் பகுதி "துரு" என்பதாகும்.

துருதுரு என்று என்னைத் தொளைக்கிருன் என்பது பழமொழி. துருவுதல்–தேடுதல்.

விலைமகளிர் இளைஞரைக் கடைக் கண்ணுல் மயக்கி வருத்துவர்.

**துணிக்கும் புத்தியை சங்கித்தறியேனை:—**

துணிக்கும் புத்தி – வெட்டுப்பட்டுப் பிளப்புண்ட அறிவு. அதாவது பகுப்புண்ட பகுத்தறிவு. அறிவின் முழு உருவம்



போய் துணிப்புண்டு அதன் தன்னிலைகெட்டு மயக்கமுறும். அதனுல் எல்லாவற்றையும் சந்தேகிப்பான். தொட்டதற்கெல்லாம் சந்தேகம். பெரியவர்கள் தேர்ந்து தெளிந்து முடிவு கட்டி நிச்சயஞ் செய்யபட்ட பொருளிலேயே சந்தேகம். அப்படி சந்தேகிப்பதன் காரணம் அறிவு பகுக்கப்பெற்றதுவே; அதனுல் அங்ஙனம் அல்லலுறுகின்றனர்; பாவம், அந்தோ! இத்தகைய அறிவினரைக் கண்டு நெஞ்சம் இரக்கமுற்று ஏங்குகின்றது. இவர்கட்கு உய்வு எந்தக்காலமோ? என்று உள்ளம் உருகுகின்றது.

பல பிறவிகளில் செய்த தவத்திஞல் மெய்யுணர்வு பெற்ற திருவள்ளுவர், சமய குரவர் முதலிய ஆன்ருேர் கூறியருளிய அறவுரைகளில் ஐயுறுவானுக்குக் கதியுண்டோ? இத்தகைய ஆன்ருேரைக் காட்டிலும் நான் அறிவுடையேன் என்று எண்ணுவோரும் உளர்? அவர் என் தாயினும் எனக்கு வயது அதிகம் என்னும் அறிஞர் திலகத்திற்கு நிகராவார்.

**துணைச் சேம்போற் பதத்தின்புற்று:—**

துன்பங்களுக்கெல்லாம் மூலகாரணம் பற்று விடாமையே என வுணர்க. அப் பற்று எனது யான் என்ற இருவகைத்து. புறப்பற்று அகப்பற்று என்ற இந்த இரண்டும் அற்ற இடமே இறைவனுடைய திருவடிகளாகும். ஆகவே அப் பதமலர்களைப் பற்றிப் பற்றற்றுப் பரம சுகத்தைப் பெற வேண்டும்.

**எனக்கேன்று அப்போருட்டங்கத் தோடுக்குஞ் சோற் றமிழ்த்
தந்திப் படியாள்வாய்:—**

"தமிழ்க் கடவுளே! இதுவரை யாரும் பெருத அளவில் எனக்குத் தமிழ்த் திருவினைத் தந்து, உயர்ந்த பொருளை இனிய தனி நடையிலே தேனிகர் செஞ்சொற்களை அடுக்கித் தொடுத்துத் தமிழ்பாட அருள்புரிவீர்" என்று அருணகிரிநாதர் இப் பாடலில் வேண்டுகின்ருர். வேண்டுவார் வேண்டுவதே வழங்குகின்ற வேலாயுதப் பெருமான், அருணகிரியார்க்கு அப் பெற்றியை அவ்வாறே அருளினுன். தமிழ் தோன்றிய காலந் தொட்டுஅருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் திருவகுப்புபோன்ற உயர்ந்த தமிழ்ச் சந்த ஞானப் பாடல்கள் தோன்றவில்லை. அவ் வளவும் வேதாகம சாரமாக அமைந்தவை. அதில் சொல்லழகு, பொருளழகு, நடையழகு, தொடையழகு, கருத்தழகு, முதலிய எல்லா நலன்களையும் ஒருங்கே காணலாம். அதனுல் தமிழ்த் தெய்வமாகிய முருகன் தமது புயமலையில் அருணகிரியாருடைய சொல்மலரையே புனைந்தான்.

"மல்லேபுரி பன்னிரு வாகுவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே" —அநுபூதி.

**தருத்தங்கப் போலத்தண்டத்தினை:—**

தரு தங்கு அ பொலத்து அண்டம் எனப் பதப்பிரிவு செய்க.

கற்பகம், பாரிசாதம், அரிசந்தனம், மந்தாரம், சந்தானம் என்ற ஐந்து மரங்களுடன் கூடியது பொன்னுலகம். இவைகள் பாற்கடலில் அமுதத்துடன் தோன்றினவை. இத்தகைய சிறந்த மரங்களும், ஐராவதமும், உச்சைஸ்ரவமும், சிந்தாமணியும், காமதேனுவும் பொருந்திய உயர்ந்த உலகம் தேவலோகம். அதனால் அமரரை வாட்டிச் சிறையில் வைத்து அமரவுலகைச் சூரபன்மன் கவர்ந்துகொண்டனன்.

சிறையில் கிடந்து வாடிய இந்திரன் மகன் சயந்தன் கூறுகின்றான். "சாமானியமான ஒரு மரத்தின்கீழ் நான் வாழ்ந்திருந்தால் இத்துன்பம் நேர்ந்திராது. கற்பக மரத்தின்கீழ் வாழ்கின்ற பெருவாழ்வை விரும்பியபடியால் கவல்கின்றேன்" என்கின்றான்.

தண்டேன் துளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே
கண்டேன் பிறர்தம் பதத்தொலைவுங் கண்டனனால்
தொண்டேன் சிவனே! நின் தொல்பதமே வேண்டுவனே.

**திருக்கஞ்சத்தனைக் கண்டித் துறக்குட்டி:—**

அழகிய தாமரைக் கோயிலில் வாழும் பிரமதேவனைத் தண்டித்து அவன் ஆணவமகன்று நல்லறிவு பெற்று, உய்யும் பொருட்டே முருகவேள் அயனைச் சிறையில் இருத்தினர். அங்ஙனம் இருத்தி அவனறியாத அத் தனிமொழிப் பொருளைத் தந்தை கேட்க மழலை மொழியால் கொஞ்சிக் கொஞ்சிப் பகர்ந்தனர்.

**செயத்துங்கம்:—**

பகைவரை வெற்றி பெறுவதும் நியாயமான முறையில் அமையவேண்டும். அப்படியமையுமாயின் அது தூய வெற்றியாகும். அபிமன்யுவைத் துரியோதனாதியர் வென்றது அநியாயமான முறையிலாகும். ஒருவனைப் பலர் சூழ்ந்து போர் செய்வதும், ஆயுதம் இல்லாதவனை ஆயுதம் உடையவன் எதிர்த்துப் போர் செய்வதும், பாரில் நின்றான் ஒருவனைத் தேரில் நின்று போர் செய்வதும், இளைத்த ஒருவனை வளைத்து நின்று போரிடுவதும் குற்றமாகும்.

அதனாலன்றோ வலிமை குன்றி நின்ற இராவணனை இராமர் கருணையுடன் நோக்கி,

"இன்று போய் போர்க்கு நாளைவா"

என்று உயிர்ப் பிச்சை நல்கியனுப்பினர்.



முருகா

# சிற்றம்பல நாடிகள்

ஊழி பெயரினும் பெயராதது காழியம்பதி. அத் திருத்தலம் உகாந்தகாலப் பெருவெள்ளத்தில் தோணிபோல் மிதப்பதனால் தோணிபுரம் எனப் பேர்பெறும். இங்கு இறைவரும் தோணியப்பர் எனத் திருப்பெயர் கொண்டு விளங்குவர். திருஞானசம்பந்த சுவாமிகள் திருஅவதாரஞ் செய்த திருத்தலம் இது எனின் இதன் பெருமை அளவிடற்கரியதோ?

இப் புண்ணியத் தலத்தில் அவதரித்தவர் **சிற்றம்பல நாடிகள்**. வேளாண்மரபில் உதித்தவர். பண்டைத் தவப்பயனால் பரிபக்குவமடைந்தவர்.

உமாபதி நாயனாருடைய ஞானப் புதல்வராகிய அருணமச்சிவாயரிடம் உபதேசம் பெற்றவர் சித்தர் சிவப்ரகாசர். அவர்பால் அநுக்ரகம் பெற்றவர் பஞ்சாக்கரதேசிகர்.

அருணமச்சிவாயர்பால் சிவஞான உபதேசம் பெற்ற மற்றொரு கிளை சீகாழியிலே அமைந்திருந்தது. அப் பரம்பரையிலே வந்தவர் சிற்றம்பலநாடிகள்.

கங்கை மெய்கண்டார் என்பவரிடம் சிற்றம்பல நாடிகள் உபதேசம் பெற்றார். பதி பசு பாசம் என்ற முப் பொருள் உண்மையை நன்குணர்ந்து, இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் எய்தி சிவயோக வாழ்வில் விளங்கினர். இடையறாத பேரன்பும் நடையறாத பெருந் துறவும் உடையவராய் இவர் பரமஞான குருமூர்த்தமாய்த் திகழ்ந்தார்.

சிற்றம்பல நாடிகள் சிவமே பொருள் என்று உன்னிநிராசையுடையவராய், உயிர்கள் யாவும் உய்ய வேண்டும் என்ற பெருங் கருணையுடையவராய் எப்போதும் தியானானந்தத் திருவருட்சமாதியில் திளைத்து வீற்றிருப்பார்.

---

**கோடைத்துங்கம்:—**

பயன் கருதாமல் தருவதும், வறியார்க்கு வழங்குவதும், கடமையுணர்ச்சியுடன் தருவதும், அன்போடும் அருளோடும் உதவுவதும் தூய கொடையாகும். அல்லாத கொடை விழுமியதாகாது.

கருத்துரை

சூரசங்கார மூர்த்தியே! சிவகுருவே! செந்திற் கந்தவேளே! அவாவுற்று அடியேன் அவலமுறாது, சிறந்த தமிழால் நின்னைப் பாடி உய்ய அருள் புரிவீர்.

பலாப்பழத்தை நாடி ஈக்கள் வருவது போலவும், வள்ளலை நாடி வறியவர் வருவது போலவும், மலரை நாடி வண்டுகள் வருவது போலவும், பக்குவ மாணவர்கள் பலர் இவரை நாடி வந்தார்கள். இவர் திருவடிகளை வணங்கி இவர்பால் அருளுபதேசம் பெற்றவர்கள் பலர்.

இத்தகைய மாணவர் குழாங்களுள் சிறந்தவர்கள் அறுபத்துமூன்று மாணுக்கராவார்கள். அவர்களுள் மிகச் சிறந்தவர்கள் சிவபுரம்—**நந்துவப்ரகாசர்**; சிவபுரம்–ஞானப்ரகாசர்; **கண்ணப்பர்** என்பவர்கள். இவர்கள் யாவரும் சிவாநுபூதிமான்களாகத் தமது ஞான குருமூர்த்திகளாகிய சிற்றம்பல நாடிகளுடைய திருவடியை விட்டகலாது இருந்து வந்தார்கள்.

மாயூரத்திற்கு அருகில் சித்தர்காடு என்ற ஒரு இடத்தில் சிவானந்த நிட்டையில் எழுந்தருளியிருந்து சிவபூசை, குருபூசை, மகேசுரபூசைகளையும் நியதியாக விதிப்படி செய்து வந்தார்கள். அந்த இடம் ஒருஞானத் தனிச் செங்கோல் நடத்தும் ஞானராஜதானியாக அமைந்திருந்தது.

ஒருநாள் சிற்றம்பல நாடிகள் மாணவர்புடை சூழ இருந்து அமுது செய்துகொண்டிருந்தார். தவசிப் பிள்ளை கை தவறுதலாக நெய்வைக்கும் இடத்தில் வேப்பெண்ணெய்யை வைத்து விட்டனன்; நினைவு இன்றி நெய்யென்று கருதி வேப்பெண்ணெய்யை எடுத்து எல்லோருக்கும் படைத்தனன். சிற்றம்பல நாடிகள் முதல் மாணவர் யாவரும் சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர்கள்; உண்பது பசிக்கேயன்றி ருசிக்கன்று அதனால் சிவசிந்தையுடன் உண்பாராயினர்கள். அம் மாணவருள் கண்ணப்பர்மட்டும் "ஐயையோ! வேம்பு நெய் விட்டனனே? கசக்கின்றதே" என்றனர்.

அப்போது சிற்றம்பல நாடிகள் "அவிச்சுவையினும் கவிச்சுவை யினிது; கவிச்சுவையினும் தவச்சுவை யினிது. தவச்சுவையுணர்ந்தோன் அவிச்சுவை யுணரான். நீ சிவயோகிகள் பந்தியிலிருந்து உண்ணும் தகுதிபெற்றாயில்லை. இனி இத் திருக்கூட்டத்துள் உனக்கு இடமில்லை. அகலுதி" என்று அருளிச்செய்தனர்.

கண்ணப்பர் எழுந்து, விண்ணருவியெனக் கண்ணருவி பெய்து, நடுநடுங்கி வாய் குழறி மெய் சிலிர்த்து, சிரமலர் மீது கரமலர் கூப்பி "பேயேன் பிழை பொறுத்தருளல் வேண்டும். நாயேன் நவை பொறுத்தருளல் வேண்டும். சேய்பிழையைத் தாய் பொறுத்தல் தகவன்றோ? கருணைக்கடலே மன்னித்தருளவேண்டும்" என்று கூறிக் கதறி யழுதார்.

"மகனே! வருந்தற்க. மனம் பரிபக்குவம் அடையும் பொருட்டு சில காலம் வடநாடு சென்று யாத்திரைசெய்துவா"



என்று பணித்தருளினார். கண்ணப்பர் குருதேவர் சரணமலர் மீது பன்முறை நன்முறையுடன் பணிந்து, புறங்காட்டாது பின்னுற நடந்து தாய்ப்பசுவை விட்டுப் பிரியும் இளங்கன்றைப்போல் வருந்தி கண்ணீரால் நிலத்தை நனைத்துக் கொண்டு வடக்கு நோக்கிச் சென்றார்.

சில திங்கள் கடந்தன. சிற்றம்பலநாடிகள் தம் மாணவர் குழாத்துடன் மகாசமாதி யடையத் திருவுளங்கொண்டார். அன்று சித்திரை மாதம்; திருவோண நட்சத்திரம். மன்னவனை விளித்தார். "எனக்கும் என் மாணவர் அறுபதுபேர்கட்கும் சமாதிக்குழி சமைப்பாய்" என்று பணித்தருளினார். அரசன் திடுக்கிட்டான். ஆன்றோர் அமுத வாக்கை மறுக்க அஞ்சினான். அச்சித்தர் காட்டிலே சிற்றம்பல நாடிகளுக்கு ஒரு சமாதிக் குழியையும், அதனைச் சூழ்ந்து அறுபது சமாதிக் குழிகளையும் வெட்டி அவற்றை ஒழுங்கு செய்தான். இந்த அதிசய நிகழ்ச்சியைக் காண மக்கள் பலர் திரண்டு வந்தார்கள். உயிருடன் சமாதியில் இறங்குவது என்றால் சாமானியமா? குறிப்பிட்ட காலம் எய்தியது. எல்லோரும் சிற்றம்பலநாடிகளை இமையாது நோக்கிய வண்ணம் நின்றார்கள். ஆச்சாரியர் அனைவரையும் அருட்கண்ணால் கண்டு ஆசிர்வதித்தார். எல்லோரும் கேட்க அடியில்வரும் இந்த மூன்று திருவெண்பாக்களை ஓதியருளினார்.

சென்றறிய வேண்டாவே சேராமை வேண்டாவே
ஒன்றுபட வேண்டாவே உள்ளத்தே—நின்றநிலை
கண்டாயே எங்குங் கதிரொளிகண் காயமெல்லாம்
உண்டான தன்மைபோல் உற்று.

உற்றுணர்வுக் குள்ளே ஒளியா வுணர்வுணர்த்தப்
பெற்றாயே எவ்வுயிர்க்கும் பேறதனை—மற்றதுதான்
மாண்டதே பார்ப்பளவில் மாளா நிறைவுநம்மைப்
பூண்டதே என்றே புகல்.

தங்களைநாம் இன்பத் தடங்கடலில் மூழ்குவித்தோம்
அங்குலகம் தீர மறப்பித்தோம்—இங்குலகில்
வாராதே வாதனையால் வந்தீரே யாமாகில்
பாராதே பாரீர் பரம்.

பின்னர் சிற்றம்பலநாடிகள் இடையில் உள்ள சமாதியில் இறங்கியருளினார். சிவானந்த சிவயோகத்தில் சின்முத்திரை காட்டி அசைவற்று சித்திரதீபம் போல் அமர்ந்துவிட்டார். மாணவர் அறுபதுபேரும் தனித்தனியே குருமூர்த்தியை வணங்கி ஒவ்வொரு வெண்பாவைப்பாடி தத்தமக்கு என்று அமைத்துள்ள குழியில் அமர்ந்து துரிய சமாதியில் ஆழ்ந்தார்கள். மண்ணால் குழிகள் மூடப்பெற்றன. பார்த்தவர்கள் யாவரும் பரவசமுற்று பதுமைகள்போல் நின்றார்கள் இப்பேறு

அடியவர்கள் திருக்கூட்டத்துள் கண்ணப்பருக்கு மட்டும் கிட்டிலேயே என்று சிலர் கூறிக் கவன்றனர். "ஈசன் அருள் அதுவாயின் என் செய்வது?" என்றார்கள்.

அச்சமயம் வடக்கு நோக்கிச் சென்றிருந்த கண்ணப்பர் அங்கு வந்து சேர்ந்தார். எல்லோரும் சமாதியுற்று சிவா நுபவம் பெற்றதைக் கண்டார். அவர் ஆற்றமுடியாத அலக்கணுற்றார். "குருநாதா! குருநாதா! சிறியேன் மட்டும் இம்மண்ணில் கிடந்து உழல்வதோ? அந்தோ! அந்தோ! இது நின் கருணைக்கு அழகோ? ஏழையைத் தள்ளிவிட்டீரே. இனி யான் எங்குறுவேன்? என் செய்வேன்? எந்தையே! என் ஞான தேசிக தீபமே! உள்ளம் உருகுகின்றதே" என்று கதறியழுதார்.

ஆண்டகுரு சிற்றம் பலவா அடியேற்கா
மீண்டும் எழுந்தருள வேண்டாவோ—நீண்டமால்
ஆரணனுங் காணாத ஆனந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது.

என்ற திருவெண்பாவைப் பாடினார்.

அப்போது ஆச்சாரியருடைய சமாதி பிளந்தது. சிற்றம்பலநாடிகள், "கண்ணப்பா! வா என் மடியில் வந்து இரு" என்று கரத்தை நீட்டி அழைத்தனர். கண்ணப்பர் ஆனந்தக் கண்ணீர் வடித்தார். "உய்ந்தேன்; உய்ந்தேன்" என்று துள்ளினார். குருதேவர் அவரைத் தழுவி மடியில் வைத்துக் கொண்டருளினார். மண் கூடி விட்டது. இந்த அதிசயத்தைக் கண்ட அனைவரும் "ஹர ஹர" என்று கூறி ஆரவாரஞ் செய்தார்கள்.

வேந்தன் வியப்புற்று சமாதிகளை யெல்லாம் செம்மையாகப் புதுக்கி வழிபாட்டுக்கு வேண்டிய நிபந்தங்களை அமைத்தான்.

சிற்றம்பலநாடிகளின் மாணவருள் ஒருவராகிய சிவபுரம்—தத்துவப்ரகாசர் என்பவர் தத்துவப்ரகாசிகை என்ற ஒரு நூல் செய்தனர்.

சிற்றம்பலநாடிகள் செய்தருளிய ஞான நூல்களை ஓதி ஏனைய மாணவர்கள் உய்வு பெற்றார்கள்.

[குறிப்பு:— மாயவரம் புகைவண்டி நிலயத்திற்கு மேற்கே உள்ள சந்தையின் மேல்பால் சித்தர் காடு என்ற இடம் இப்போதும் உளது. அதில் இச்சிற்றம்பலநாடிகளுடைய சமாதியுளது. தரிசிக்கலாம்.]

---

உ

முருகா

# கற்பு

## குவராபாய்

மங்களபுரி என்ற நகரில் மன்னவனிடம் புரோகிதராக இருந்தார் ஒரு அந்தணர். செந்தண்மை பூண்ட அந்த அந்தணரின் பொற்பு மிகுந்த கற்புடைய மனைவி விருந்தோம்பி கணவனார் கருத்தறிந்து காதலுடன் வாழ்ந்தாள். ஏழைகளாக இருந்தாலும் அவர்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி நிலவியது. திருமாலுடைய திருவுருவை வைத்து நாடோறும் ஆராதனை செய்து அன்பு செய்வார்கள். பெருமான் திருமுன் இருவரும் இருந்து நாமசங்கீர்த்தனஞ் செய்வார்கள். எப்போதும் இனிய முகத்துடன் கனியமுதன்ன இன் சொல்லுடன் நற்குண சீலர்களாய் வாழ்ந்தார்கள். அரச வாழ்வில் அமையாத ஆனந்தம் அவர்கள் வாழ்வில் அமைந்திருந்தது. நாளைக்கு வேண்டும் என்று எடுத்து வைப்பதில்லை. அன்றாடம் வருவதைச் சமைத்து அகதிகட்கு அளித்து மிகுதியைத் தாங்கள் உண்டு உவந்து ஆறுதலோடு படுப்பார்கள்.

அவர்கள் வாழ்வில் குழந்தைப்பேறு தோன்றவில்லை. அது ஒன்றுதான் பெருங் குறையாக இருந்தது. திருவருள் துணை செய்யும்போது கிடைக்கும் என்று சித்த சமாதானத்துடன் இருந்தார்கள். ஏகாதசி விரதம் அநுஷ்டித்தார்கள். நாராயண மந்திரத்தைப் பாராயணஞ் செய்தார்கள். நற்றவப் பயன் ஒருங்கு சேர்ந்து ஒரு உருவம் எடுத்ததுபோல் ஒரு பெண் மகவு பிறந்தது. அம்மகவுக்குக் குவராபாய் என்று பேர் சூட்டினார்கள்.

குழந்தை இனிது வளர்ந்தது. தளர்நடையிட்டு வளர்மதி போல் விளங்கியது. திருமகளே வந்து உதித்ததுபோல் காட்சியளித்தாள்.

மனந்தூயார்க்கு எச்சம்நன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

என்ற திருவள்ளுவதேவரது திருவாக்கின்படி அப் பெண் மகவு சகல குணங்களும் வாய்க்கப் பெற்றிருந்தாள். அன்றியும் தந்தையார் மாயவனைத் தூயமனதுடன் பூசிக்கும்போது தானும் அருகில் இருந்து துதி செய்வாள். மழலை மொழியால் இறைவனுடைய திருநாமங்களைக் கூறுவாள். இளமையில் விளைகின்ற பக்தி புதிய துணியில் சாயம் படிவதுபோல் நன்கு உறுதியாக இருக்குமல்லவா?

அக்காலத்து வழக்கம்போல் அவளுக்கு அறிவு நன்கு முதிர்வதற்கு முன்னரேயே இளமைப் பருவத்தில் திருமணம்

அடியவர்கள் திருக்கூட்டத்துள் கண்ணப்பருக்கு மட்டும் கிட்டிலையே என்று சிலர் கூறிக் கவன்றனர். "ஈசன் அருள் அதுவாயின் என் செய்வது?" என்றார்கள்.

அச்சமயம் வடக்கு நோக்கிச் சென்றிருந்த கண்ணப்பர் அங்கு வந்து சேர்ந்தார். எல்லோரும் சமாதியுற்று சிவா நுபவம் பெற்றதைக் கண்டார். அவர் ஆற்ற முடியாத அலக்கணுற்றார். "குருநாதா! குருநாதா! சிறியேன் மட்டும் இம்மண்ணில் கிடந்து உழல்வதோ? அந்தோ! அந்தோ! இது நின் கருணைக்கு அழகோ? ஏழையைத் தள்ளிவிட்டீரே. இனி யான் எங்குறுவேன்? என் செய்வேன்? எந்தையே! என் ஞான தேசிக தீபமே! உள்ளம் உருகுகின்றதே" என்று கதறியழுதார்.

ஆண்டகுரு சிற்றம் பலவா அடியேற்கா
மீண்டும் எழுந்தருள வேண்டாவோ—நீண்டமால்
ஆரணனுங் காணாத ஆனந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது.

என்ற திருவெண்பாவைப் பாடினார்.

அப்போது ஆச்சாரியருடைய சமாதி பிளந்தது. சிற்றம்பலநாடிகள், "கண்ணப்பா! வா என் மடியில் வந்து இரு" என்று கரத்தை நீட்டி அழைத்தனர். கண்ணப்பர் ஆனந்தக் கண்ணீர் வடித்தார். "உய்ந்தேன்; உய்ந்தேன்" என்று துள்ளினார். குருதேவர் அவரைத் தழுவி மடியில் வைத்துக் கொண்டருளினார். மண் கூடி விட்டது. இந்த அதிசயத்தைக் கண்ட அனைவரும் "ஹர ஹர" என்று கூறி ஆரவாரஞ் செய்தார்கள்.

வேந்தன் வியப்புற்று சமாதிகளையெல்லாம் செம்மையாகப் புதுக்கி வழிபாட்டுக்கு வேண்டிய நிபந்தங்களை அமைத்தான்.

சிற்றம்பலநாடிகளின் மாணவருள் ஒருவராகிய சிவபுரம்—தத்துவப்ரகாசர் என்பவர் தத்துவப்ரகாசிகை என்ற ஒரு நூல் செய்தனர்.

சிற்றம்பலநாடிகள் செய்தருளிய ஞான நூல்களை ஓதி ஏனைய மாணவர்கள் உய்வு பெற்றார்கள்.

[குறிப்பு:— மாயவரம் புகைவண்டி நிலயத்திற்கு மேற்கே உள்ள சந்தையின் மேல்பால் சித்தர் காடு என்ற இடம் இப்போதும் உளது. அதில் இச்சிற்றம்பலநாடிகளுடைய சமாதி யுளது. தரிசிக்கலாம்.]

---

உ
முருகா

# கற்பு

## குவராபாய்

மங்களபுரி என்ற நகரில் மன்னவனிடம் புரோகிதராக இருந்தார் ஒரு அந்தணர். செந்தண்மை பூண்ட அந்த அந்தணரின் பொற்பு மிகுந்த கற்புடைய மனைவி விருந்தோம்பி கணவனார் கருத்தறிந்து காதலுடன் வாழ்ந்தாள். ஏழைகளாக இருந்தாலும் அவர்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி நிலவியது. திருமாலுடைய திருவுருவை வைத்து நாடோறும் ஆராதனை செய்து அன்பு செய்வார்கள். பெருமான் திருமுன் இருவரும் இருந்து நாமசங்கீர்த்தனஞ் செய்வார்கள். எப்போதும் இனிய முகத்துடன் கனியமுதன்ன இன் சொல்லுடன் நற்குண சீலர்களாய் வாழ்ந்தார்கள். அரச வாழ்வில் அமையாத ஆனந்தம் அவர்கள் வாழ்வில் அமைந்திருந்தது. நாளைக்கு வேண்டும் என்று எடுத்து வைப்பதில்லை. அன்றாடம் வருவதைச் சமைத்து அகதிகட்கு அளித்து மிகுதியைத் தாங்கள் உண்டு உவந்து ஆறுதலோடு படுப்பார்கள்.

அவர்கள் வாழ்வில் குழந்தைப்பேறு தோன்றவில்லை. அது ஒன்றுதான் பெருங் குறையாக இருந்தது. திருவருள் துணை செய்யும்போது கிடைக்கும் என்று சித்த சமாதானத்துடன் இருந்தார்கள். ஏகாதசி விரதம் அநுஷ்டித்தார்கள். நாராயண மந்திரத்தைப் பாராயணஞ் செய்தார்கள். நற்றவப் பயன் ஒருங்கு சேர்ந்து ஒரு உருவம் எடுத்ததுபோல் ஒரு பெண் மகவு பிறந்தது. அம்மகவுக்குக் குவராபாய் என்று பேர் சூட்டினார்கள்.

குழந்தை இனிது வளர்ந்தது. தளர்நடையிட்டு வளர்மதி போல் விளங்கியது. திருமகளே வந்து உதித்ததுபோல் காட்சியளித்தாள்.

மனந்தூயார்க்கு எச்சம்நன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

என்ற திருவள்ளுவதேவரது திருவாக்கின்படி அப் பெண் மகவு சகல குணங்களும் வாய்க்கப் பெற்றிருந்தாள். அன்றியும் தந்தையார் மாயவனைத் தூயமனதுடன் பூசிக்கும்போது தானும் அருகில் இருந்து துதி செய்வாள். மழலை மொழியால் இறைவனுடைய திருநாமங்களைக் கூறுவாள். இளமையில் விளைகின்ற பக்தி புதிய துணியில் சாயம் படிவதுபோல் நன்கு உறுதியாக இருக்குமல்லவா?

அக்காலத்து வழக்கம்போல் அவளுக்கு அறிவு நன்கு முதிர்வதற்கு முன்னரேயே இளமைப் பருவத்தில் திருமணம்

துவிட்டார்கள். பின்னர் வயது ஏறியபின் அவளுக்குப் பகவானிடம் பக்தி முறுகி முதிர்ந்தது. சதா அவருடைய பாதமே நினைந்து உள்ளம் உருகுவாள். பிறவிப் பெருங்கடலைக் கடக்கவேணுமே என்று ஏங்குவாள்.

பின்னர் மங்கைப் பருவமடைந்தாள். இதனைக் கணவன் வீட்டார் அறிந்தார்கள். அழைத்துப் போவதற்காக மாமன் மாமியர் வந்தார். தன்னையழைக்க மாமன் மாமியர் வந்துள்ளார் கள் எனவுணர்ந்த அருந்தவச் செல்வி அளக்க முடியாத அலக்கணுற்ருள். "அந்தோ! சம்சார சாகரத்தில் வீழ்ந் தோர்க்கு உய்யுநெறியுளதோ! அது என்றென்றும் துன்றிய துயரைத் தருமே? பொன்றும்வரை புகலிடமேது? ஆ ஆ! எத்தனைக்காலம் இறப்பதும் பிறப்பதுமாக மாறி மாறி வரு கின்றது? பிறவிச் சுழலுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க வேண்டாமோ? கணவன்பால் சென்று காமவிடாய் கொண்டு, மக்கள் பல பெற்று மயங்குவது முறையோ? ஆசாபாசம் அல்லலையே தரும். பரம கருணாமூர்த்தியே! உன்னைச் சர ணடைந்த என்னை இந்த இருள் நெறியில் தள்ளாதே. அருள் நெறியைத்தந்து ஆதரிப்பாய். தூயவர் போற்றும் மாயவனே! ஆயர் குலக்கொழுந்தாம் நேயனே! மறைகமழும் மலர் வாயனே! நின் திருவடியை யன்றி எனக்கு ஒரு பற்றுமில்லை" என்று உறுதிகொண்டாள்.

அன்றிரவு பதினைந்து நாழிகை. நள்ளிருள். எங்கும் நல்ல அமைதி; மெல்ல எழுந்தாள். எல்லா நகைகளையுங் கழற்றினாள். தான் பூசிக்கின்ற பகவான் முன் வைத்தாள். பணிந்தாள். உள்ளந் துணிந்தாள். யாரோ தன்னை வா என்று அழைப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அரி நாமத்தைக் கூறிக் கொண்டே நடந்தாள். கோட்டை வாசலை யடைந்தாள். கதவு தாளிட்டிருந்தது. "எம்பெருமானே!" என்ருள். தானே கதவு திறந்தது. பந்தபாசம் பறந்தது. வெளிப்பட்டாள். தன்னந் தனியே சின்னஞ் சிறுமியாகிய அவள் சென்ற வண்ணமாக இருந்தாள். அவள் உள்ளத் துணிவுதான் என்னே? கல்லினும் இரும்பினும் வலியதாக அமைந்துவிட்டது. இப்படி குவரா பாய் பல நாள் இரவு பகலாக நடந்தாள். ஏதோ ஒரு காந்தம் இழுப்பதுபோல் அவளை ஒரு சக்தி இழுத்துச் சென்றது. இறுதியில் பகவான் கண்ணன் இளமையில் விளையாடிய பிருந்தாவனம் போனாள். யமுனா நதியில் நீராடினாள். கண்ணீர் சொரிந்து கண்ணா! கண்ணா! என்று பாடினாள்; ஆடினாள். அவள் உள்ளத்தில் அன்பு வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. மெய் மறந்து நின்ருள். இவ்வாறு பன்னாள் பக்தி புரிந்தாள்.

ஒருநாள் கண்ணபிரான் அவளுக்குக் காட்சியளித்து "என் குழந்தாய்! வருந்தாதே. இனி உனக்கு பிறவித்துயர் இல்லை. என் பூரண அருள் உனக்கு உண்டு. உன் உள்ளத்தில் நான்



எழுந்தருளிவிட்டேன். இனி எனக்குக் கோயில் உன் உள்ளத் தாமரைதான். ஆ ஆ! நின் அன்பு என்னை உருக்கிவிட்டது. உனது யோக நலத்தை நான் கவனித்துக்கொள்வேன். இந்தா இந்த அமுதத்தை உண்ணு. உன் மேனி வருந்தாது" என்று அருள் புரிந்து மறைந்தார்.

இப்படி ஆதிமூலமாய அண்ணலின் அருளைப் பெற்ற அவள் ஞானத் தேனையுண்டு ஊன வாழ்வை விண்டு பக்தி நெறி நின்று பரவசமாகத் திகழ்ந்தாள்.

இவளை உறவினர் எங்குந் தேடிக் காணாது இளைத்தார்கள். தந்தையார் மட்டுந் தளராத ஊக்கத்துடன எட்டுத் திசையும் பதினாறு கோணமுந் தேடிக்கொண்டு முடிவில் பிருந்தா வனத்தில் வந்து புதல்வியைக் கண்டார்.

"அம்மா! என் அருந்தவச் செல்வமே! இது என்ன கோலம்? இளம் பருவத்தில் நீ கணவனுடன் வாழ்வதல்லவா முறை? "இல்லறமல்லது நல்லறமன்று" என்ற மூதுரையை மறக்கலாமா? "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற திரு மொழியைத் துறக்கலாமா? என் கண்ணே! பெண்ணாகிய நீ இப்படியிருப்பது தருமமன்று. என்னுடன் வா. கணவனுடன் வாழ்ந்து நன்மக்களைப்பெற்று, பிறகு பக்தி செய்து முத்தி யடை" என்ருர்.

குவராபாய், "தந்தையே! நன்று நன்று உமது சொல். பிறவிகள்தோறும் எத்தனையோ கணவன்மார். எத்தனையோ மக்கள். எத்தனையோ தாய்; எத்தனையோ தந்தை. எனவே இனி என்றும் எனக்குத் துணையான இறைவனையன்றி வேறு ஒருவரையுங் கருதேன். வயது முதிர்ந்த உமக்கு இன்னும் பாசபந்தம் போகவில்லையே? எல்லாவற்றையுந்துறந்து பிருந்தா வனத்தலத்தில் இருந்து பக்தி நெறி நின்று பரமானந்த வாழ் வைப் பெறுவீராக. இது நிலையில்லாத உடம்பு; ஆகவே வீண்காலம் போக்கி நமனுக்கு ஆளாகவேண்டாம். சென்ற ஒரு கணத்தை ஒரு கோடி பொன் கொடுத்தாலும் மீட்க முடியாது. தாங்கள் எல்லாம் அறிந்தவர். உமக்கு நான் அதிகம் சொல்வது முறையாகாது" என்ருள்.

"மகளே! கடவுள் எங்கும் இருக்கின்ருர் அல்லவா? ஆதலால் நமது வீட்டிற்கு வா. நீ உன் விருப்பப்படி நம் விட்டில் உள்ள பூஜை அறையில் தனித்திருந்து தவஞ் செய். உன் தவ நெறிக்கு நாங்கள் தடை செய்யமாட்டோம். உன் தவத்திற்கு உதவி செய்து நாங்களும் கடைத்தேறுவோம். என் செல்வமே! உன்னை இந்த வரங் கேட்கின்றேன். இல்லையென்னுமல் இவ் வரமளித்து என்னுடன் வா" என்று இரந்து வேண்டினார் தந்தை.

"அப்பா! இன்றிரவு என்னுண்டவன் அநுமதி தந்தால் நான் உன்னுடன் வருவேன்" என்றாள் உத்தம புத்திரி.

இரவு இறைவனைத் துதித்தவண்ணமே தூங்கிவிட்டாள். விடியற்காலை வேணுகோபாலன் கனவில் தோன்றி "குழந்தாய்! நீ மங்களபுரி போ; நான் அங்கும் இருக்கின்றேன். உனக்கு உறு துணை புரிவேன்" என்று அருளிச் செய்தார்.

கனவு தெளிந்து எழுந்தாள். "அப்பா! அப்பன் அநுமதி தந்துவிட்டான்: போவோம்; வாருங்கள்" என்று தந்தையுடன் நடந்தாள். ஊர் வந்து சேர்ந்தாள். தனிமையும் இனிமையும் உடைய பூஜை அறைக்குள் இருந்துகொண்டு தியானிப்பாள். மாலை நேரத்தில் பெருமானுடைய திருவுருவத்தை நன்கு அலங்கரித்து தம்பூரா தாளம் முதலிய கருவிகளை யிசைத்துப் பாடுவாள். அப்போது அவள் உள்ளம் அழலிடைப்பட்ட மெழுகுபோல் உருகும். அப்பாடலைக் கேட்ட கல்லுங் கரையும்.

இவ்வாறு தவவொழுக்கத்தில் நின்று குவராபாய் பக்தி செய்துகொண்டிருந்தாள். பிறர் கண்பார்வைக்குத் தோன்ற மாட்டாள். எப்பொழுதோ ஒரு சமயம் வற்புறுத்தினால் மட்டும் பாலோ பழமோ சிறிது உண்பாள். அவள் பெருமை எங்கெங்கும் பரவியது. அந்நகரை ஆளுகின்ற அரசன் செவிக்கும் எட்டியது. தனது புரோகிதரை நோக்கி, "ஐயா! தங்கள் புதல்வியின் பெருமையைப் பலரும் பாராட்டக் கேட் டேன். அவள் பக்தியும் சித்தியும் உடையவள் என்று அறிஞர்கள் புகழ்கின்றார்கள். அவளுடைய பாடல் தேனி னும் இனியதாமே. நான் ஒருநாள் கேட்டு மகிழ உத்தரவு தரவேணும்" என்றான்.

மன்னவன் சொல்லுக்கு மறுப்புண்டா? புரோகிதர் "அரசர் ஏறே! அவ்வாறே ஆகட்டும்; இன்று மாலை வந்து கேட்கலாம்" என்றார்.

அன்று மாலை அரசன் சிறந்த ஆடை அணிகலன்களுடன் ஏழையாகிய புரோகிதருடைய சிறிய வீட்டையடைந்தான். புரோகிதர் அவனுக்கு ஒரு ஆசனப்பலகை யளித்தார். மன்னன் தன் மெய்க்காவலனை வெளியே நிறுத்திவிட்டு தான் பலகை மீது அமர்ந்தான். பூஜை வீட்டில் வானில் இருந்து இறங்கிய அழகிய மின்னற் கொடிபோல் நின்று கண்ணீரும் கம்பலையுமாக அன்பு வெள்ளம் புரள உள்ளங் குழைந்து குவராபாய் பவரோகம் நீங்கவேண்டும் என்று பாடிக்கொண்டிருந்தாள்.

நாதநாமக்ரியா—ஆதிதாளம்.

பல்லவி

இன்றே என்னையாள் ஈசா
இன்றே என்னை யாள்.



அநுபல்லவி

நன்றே புரிகுவன் நாதா நவைபுல்லாமல்
நமனார் வருமுன்னே நாளை எனச்சொல்லாமல். (இன்றே)

சரணம்

எத்தனையோ பிறப்பெடுத் திளைத்தேன் ஈதலால்
இரும்புவி மன்னரும் இவ்வுலகில் வீதலால்
எத்தனையோ விதம் எண்ண அலை மோதலால்
இன்றைக் கிருந்தார்கள் நாளையில்லை யாதலால். (இன்றே)

இப்பாடலைக் கேட்ட மண்ணும் மரமும் உருகின. ஆனால் மன்னன் மனம் மட்டும் உருகவில்லை. "ஆ! ஆ! இவள் என்ன மேனகையா? ரம்பையா? என்ன அழகு? என்ன அழகு? வைர நகை மண்ணாங்கட்டியில் இருப்பதுபோல் இவள் இக் குடிசையில் இருக்கின்றாளே. நம் அரண்மனையில் உள்ள அரசமா தேவிகள் இவள் காலில் உள்ள நகத்தின் அழகுக்கு இணையாக மாட்டார்களே! ஆ! இன்று நல்ல நாள். இவளைக் காணும் பேறு கிட்டியது. இனி இவளை அணையும் பேறும் கிட்டும். மன்னவன் விரும்பினால் கிட்டாதது ஒன்று உளதோ? பரம ஏழையாகிய இந்த அந்தணனுக்கு தேவலோக ரம்பைபோல் இவள் வந்து உதித்திருக்கின்றாள். பாவம்! இவள் உடம்பில் ஒரு குண்டுமணி தங்க நகைகூட இல்லை. பட்டாடையில்லை. ஆனால் இவள் மனதில் மகிழ்ச்சிமட்டும் இருக்கின்றது. நம்மிடம் பட்டு, பொன், மணி எல்லாம் இருக்கின்றன. மகிழ்ச்சியென்பது மருந்துக்கும் இல்லை. உலகமே ஒரு விநோதமாக இருக்கின்றது. நிரம்பச் செல்வம் உள்ளவன்பால் அவற்றை அநுபவிக்க மக்கள் பிறப்பதில்லை. வறுமையால் வாடுகின்றவனுக்கு ஆண்டுக்கொரு குழந்தை பிறக்கின்றது. படுக்க இடம் இல்லாதவனுக்குத் தூக்கம் வருகின்றது. பெரிய பெரிய கட்டிலும் பஞ்சணையும் பரந்த இடமும் உள்ள ஒருவனுக்கு இரவு முழுவதும் தூக்கம் வருவதில்லை. ஏழைக்கு உத்தமமான மனைவி அமைகின்றாள். கணவனுக்குப் பயந்து நடக்கின்றாள். கோடீச்சுரனுக்குப் பொல்லாத மனைவி அமைகின்றாள். கோடீச்சுரனைக் கண்டு ஊரெல்லாம் பயப்படுகின்றது. ஆனால் அவன் மனைவியைக் கண்டு பயப்படுகின்றான். பட்டும் பொன்னும் மணியும் பூண்டு அலங்கரித்துக்கொள்வார்க்குத் துளி அழகுகூட இருப்பதில்லை. ஒருவிதமான அலங்காரப் பொருளுமில்லாத இவள் அழகின் கருவூலமாகக் காட்சியளிக்கின்றாள். இவளை எந்த விதத்திலும் நாம் மனைவியாக அடைய வேண்டும்" என்று எண்ணினான்.

நெடு நேரம் அவள் பாட்டைக் கேட்டுப் பரவசப்பட்டான். அவளுடைய மெய்ஞ் ஞானப் பாடல் அவனை ஏன் திருத்தவில்லை? படலம் மூடிய கண்களுக்குச் சூரியனால் ஒளிதா முடியா

தல்லவா? எண்ணெய் பட்ட தாளில் எழுதும் மை படியாது அல்லவா? அதுபோல் காமாந்தகாரம் குடிகொண்ட அவன் உள்ளத்தில் பக்திப் பாடல் புகுந்து அவனை உய்விக்க முடியவில்லை. பாவம் அவன் உள்ளத்தில் காமப்புயல் கடுமையாக வீசியது. அதன் நடுவே பாக்குமரம்போல் நின்று கலங்கினான்.

மெல்ல எழுந்து புறப்பட்டான். அவன் உள்ளம் உணர்ச்சியெல்லாம் குவராபாயிடமே நின்றுவிட்டன. வெற்றுடம்பு மட்டும் அரண்மனைக்குச் சென்றது. அவனுக்கு உடம்பெல்லாம் அனல்போல் எரிந்தது. முகங் கரிந்தது. ஏதோ ஒரு அரிய பொருளை இழந்துவிட்டதுபோல் துடித்தான். புரோகிதரை அழைத்தான். "ஐயா! இங்கே வாரும். இன்று முதல் உமக்கு நல்லகாலம் பிறந்துவிட்டது. இனிமேல் நீர் இந்த புரோகிதத் தொழில் செய்யவேண்டாம். இந்தா! ஒரு லட்சம் பொன் தருகின்றேன். இதை வைத்துக்கொண்டு சுகமாக இரும். உமது மகளை என்பால் ஒப்புவித்துவிடும். அவள் இனி உமது குடிசையில் இருக்கவேண்டாம். என் அரண்மனையில் என்னுடன் அரசபோகத்தில் சுகித்து வாழட்டும். எனக்கு அவள் மீது அளவற்ற அன்பு ஏற்பட்டுவிட்டது" என்று வாய் கூசாமல் கூறினான். உத்தம குணம் நிறைந்த புரோகிதர் இக் கொடுஞ் சொற்களைக் கேட்டு நடுங்கினார்.

"மன்னவரே! மன்னிக்கவேணும். என் சொல்லைச் சற்று நிதானபுத்தியுடன் கேட்கவேணும். நெருப்பைச் சிற்றெறும்பு உண்ண விரும்பியதுபோல் இருக்கின்றது உமது விருப்பு. என் புதல்வியைச் சாமான்யமாக எண்ணாதீர். அவள் ஈசன் அருள் பெற்றவள். காமக்கடலைக் கடந்தவள். பந்த பாசத்தைத் துறந்தவள். அவள் பார்வை படும் திசையிலேயே வினை தொடராது. நீர் பெண்களுடைய கற்பு நெறியைக் காப்பாற்றவேண்டியவராக இருந்தும் இப்படி முறை தவறிப் பேசலாமா? உமது நீதிக்கு இது அழகன்று. தீராப் பழிபாவத்திற்கு ஆளாகாதீர். காமத்தால் கெட்டவர் பலர். கீசகன், நகுஷன், இந்திரன், சந்திரன், சுந்தோபசுந்தரர், சடாசுரன், கிம்மீரணன், இராவணன் முதலிய பலர். இந்த வரிசையில் நீரும் ஒருவராகச் சேரவேண்டாம். நான் உமக்கு அதிகஞ் சொல்ல விரும்பவில்லை. நீர் உணவு என்று கருதி நெருப்பில் விழும் விட்டில் பூச்சியைப்போல் மடியாதீர்" என்றார் புரோகிதர்.

வேந்தன் அச் சொற்களைக் கேட்டான். ஒன்றும் பேச நாவெழவில்லை. ஏழைப் பிராம்மணன் தானே. பொன் கொடுத்தால் புதல்வியைத் தர ஒருப்படுவான் என்று எண்ணினான். புரோகிதரின் உள்ளஉறுதியைக் கண்டு வியந்தான். இனி அவளை அடைய வழி யாது? என்று எண்ணினான். பலாத்காரத்தில் கவர்ந்தால் பாரெங்கும் பழி சூழும் என்று பயந்தான். இரகசியமாக அவளைப் புணரக் கருதினான்.



இரவு 15 நாழிகை. ஊரெல்லாம் உறங்குகின்ற வேளை. மெல்ல எழுந்தான் வேந்தன். பிறர் அறியாதிருக்கும் பொருட்டும் இரவில் இருளில் மறைந்து செல்லும்பொருட்டும் கரிய சொக்காய் அணிந்தான். கரிய உடையுடுத்து வடிவாள் மட்டும் இடையில் தொங்கப் புறப்பட்டான். யாராவது பார்த்துவிடுவார்களோ என்று அஞ்சினான். நாலாபக்கங்களிலும் பார்த்துக்கொண்டே கள்வனைப்போல் சென்றான். புரோகிதருடைய வீட்டின் பின்புறஞ் சென்றான். அங்கு ஒரு நாய் குலைத்தது. மன்னன் மனம் பதை பதைத்தது. ஒரு புறம் ஒதுங்கி யமர்ந்தான். என்னே பேதமை. காமத்திற்கு அடிமையான அரசன் அரண்மனையை விடுத்தான். குடிசையை அடுத்தான். யானையைக் கண்டு அஞ்சாத அவன் நாய்க்கும் அஞ்சுகின்றான்.

சிறிது நேரம் சென்றது. ஏதோ ஒரு மயக்கம் வந்து மன்னன் அப்படியே சாய்ந்து தூங்கிவிட்டான்.

பயங்கரமான பெரிய அலைகளோடும் நொப்பு நுரைகளோடும் மிக்க வேகமாக ஒரு பெரிய ஆறு ஓடுகின்றது. அதில் பல முதலைகள் உலாவுகின்றன; ஆற்றின் வெள்ளம் மோதி மோதிக் கரைகளை உடைக்கின்றது. கடும் வேகமாக ஓடும் ஆற்றின் பிரவாகம் காண்பார் கண்கள் கூசும்படி அச்சத்தை விளைவித்தது. ஆற்றுக்கு அக்கரையில் அழகிய ஒரு சிறு ஆலயம். அந்த ஆலயத்தில் பஞ்சாயுதபாணியாகப் பகவான் நிற்கின்றார். அவர் பக்கத்தில் நின்று பரமபக்த சிகாமணியாகிய குவராபாய் பாடிக்கொண்டு நிற்கின்றாள். அரசன் இக்கரையில் நின்று அவளைப் பார்க்கின்றான். இறங்க முடியாத ஆற்று வெள்ளம் இடையில் தடுக்கின்றது. இறங்கினால் நீ தொலைந்தாய் என்று கூறுவதுபோல் முதலைகள் கரையோரம் பயங்கரமான பற்களைத் திறந்து காட்டி வாயைப் பிளந்து நிற்கின்றன.

இந்தக் காட்சியைக் கனவில் கண்டான் காவலன். மயக்கந் தெளிந்து எழுந்தான். கனவு நிலையைக் கருதினான். அவன் உள்ளத்தில் இருந்த காமந் தொலைந்தது. நல்லறிவு நண்ணியது. கண்ணீர் சிந்தினான். "ஆ! ஆ! என்னே இக் கனவு? உத்தமியாகிய அவள் பிறவியலையாற்றைக் கடந்து அக்கரையில் நிற்கின்றாள். நான் இயமதூதர்களாகிய முதலைகளால் துன்புற்று இக்கரையில் நிற்கின்றேன். நானா அவளை விரும்புவது? என்னே நமது மடமை. இதுவா அரசன் கடமை? அவள் ஆண்டவனது உடைமை. சீ சீ! இத் துர்ப்புத்தி கூடாது. கேவலமான ஆசையால் கெட்டேன்.

ஏ மனமே! இனி அந்த அம்மை உன் தாய்; உன் தெய்வம். அவளுக்கு ஆளாகிக் கடைத்தேறு" என்று தனக்குள் தானே கூறிக்கொண்டான்.

அரண்மனை சென்றான். தன்னைத்தானே இருத்திக் கொண்டான். பொழுது புலர்ந்தது. நீராடினான். பூசைக் குரிய தேங்காய் பழம் மலர் பால் முதலிய சாதனங்களை ஏந்தினான். குவராபாய் இருக்கின்ற குடிசைக்குச் சென்றான். அடியற்ற மரம்போல் கால்மீது வீழ்ந்தான்; அழுதான்; தொழுதான். "என்னை மன்னிக்கவேண்டும்; அம்மா! நான் உன் குழந்தை. நீ உலக மாதா. சேய் பிழையைத் தாய் பொறுக்க வேண்டும். என்னைப் பவசாகரத்தில் இருந்து கரை சேர்த்து ஆதரிக்க வேணும்" என்று வேண்டினான்.

குவராபாய் மன்னனுடைய பரிபக்குவ நிலைகண்டு அருள் பாலித்தாள். மந்திரோபதேசம் புரிந்தாள். மன்னன் மனம் மாறி மந்திரோபதேசம் பெற்று நல்வழிப்பட்டதைப் பார்த்த புரோகிதர் புளகாங்கித முற்றார். அரசன் எவ்வழி அவ்வழி குடிகள். ஆகவே அரசனே அவளுடைய சீடன் ஆனால் குடிகள் ஆகாமல் இருப்பாரோ? அந்த ஊரவர், சுற்றுப் புறத்து ஊரவர்கள் எறும்பு சாரைபோல் வந்து வந்து குவராபாயிடம் உபதேசம் பெற்று உய்வுபெற்றார்கள். எங்கும் பக்தி நெறி பரவியது.

குவராபாய் பன்னெடுங்காலம் பக்திசெய்து முத்தி பெற்றாள்.

---

## வாழ்த்துப்பா

கலிவிருத்தம்

ஒருதிரு முருகனை உவந்து வாழ்த்தியே
அருமையார் திருப்புக ழமுதை யன்புடன்
தருகிரு பானந்த வாரி தன்மலர்
இருபதம் அன்புடன் ஏத்து வோமரோ.

மாதர்கள் கற்பினை மகிழ்ந்து போதிக்கும்
ஆதரத் திருப்புகழ் அமுதம் வாழியே
காதலாய்ப் படிப்பவர் களித்து வாழியே
பூதல முழுவதும் புனிதம் வாழியே.

திருப்புகழ் அமுதமாம் திங்கட் டாளது
பொருப்புடை வேளருள் பொருந்தி பூரண
அருட்கொடே யிருபதாம் ஆண்டு மேயது
விருப்புடன் யாவரும் வேண்டி யுய்யவே.

N. காமாட்சி (வித்துவான் புகுமுக வகுப்பு)
திருப்புகழ்சபை, மதுரை.

உ

முருகா

# "அவர் உள்ளம் ஆர் அறிவார்?"

கஞ்சனூரில் அவதரித்தவர் அரதத்த சிவாசாரியர். அவர் சைவசமயத்தை நிலை நிறுத்தியவர். காய்ந்த இரும்புப் படியின் மீது நின்று சிவபரத்துவம் கூறினார். கல் நந்தியை புல்லருந்தச் செய்தவர். அவர் ஒரு சமயம் உடல் நலமின்றி மூன்றுநாள் சிவாலயம் போகவில்லை. நான்காவதுநாள் நீராடினார். மாலை சிவாலயஞ் சென்றார்.

கோயிலில் ஒரு இளம் பெண்மணியாகிய தேவதாசியைத் தூணில் கட்டி கோயில் தலைவர், "நேற்று ஏன் நீ கோயிலுக்கு வரவில்லை" என்று கேட்டு அடித்துக் கொண்டிருந்தார். இதனைக் கண்ட அரதத்தர், "அந்தோ!" என்று வாய்விட்டலறி அழுதார். விம்மிவிம்மி அழுவாராயினார்.

அவர் ஏன் இப்படி அழுகின்றார் என்ற கருத்தை அங்குள்ளவர்களால் எளிதில் அறிய முடியவில்லை.

இந்தப் பெண்ணை அடிப்பதைக் கண்டு இவர் ஏன் இவ்வாறு அழுகின்றார்? என்ற வினா அக்கூட்டத்தில் எழுந்தது.

"கருணையால் இப்படி அழுகின்றார் போலும்" என்றார் ஒருவர்.

"இவளுக்கும் இவருக்கும் தொடர்பு இருக்கலாம். இல்லையேல் இவள் அடிபடுவதை நோக்கி விம்மியழமாட்டார் தானே" என்றார் ஒருவர்.

"அழகிய பெண் அடிபடுவதனால் அழுகின்றார் போலும்" என்றார் ஒருவர்.

இப்படிப் பலர் பலவண்ணம் பேசிக்கொண்டார்கள். முடிவில் ஒரு சிறந்த அறிஞர் அரதத்தரை வணங்கி, "சுவாமீ! இந்த மங்கையைக் கோயில் தலைவர் அடித்தால் தாங்கள் ஏன் அழுகின்றீர்?" என்று கேட்டார்.

அரதத்தர், "ஐயன்மீர்! இந்த அம்மாள் நேற்றுகோயிலுக்கு வரவில்லை யென்பதற்காக இவர் கட்டி அடிக்கின்றாரே! நான் மூன்று நாட்களாகக் கோயிலுக்கு வரவில்லை. இவரைக் கட்டி அடிப்பதுபோல் என்னையுங் கட்டியடிக்க ஆளில்லையே? கோயிலுக்கு வராத குற்றத்திற்காக இவ்வாறு கட்டியடித்தால் தானே உய்வுபெற முடியும். ஆகவே என்னை அடிக்கவில்லையே என்று எண்ணி அழுகின்றேன்" என்றார்.

இதனைக் கேட்டவுடனே அங்குள்ளார் ஐயந் தீர்ந்தனர். "அவர் உள்ளம் ஆரறிவார்" அவர் சொன்ன பின்னரே அறிந்து மகிழ்ந்தனர்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

தூய அன்னை சாரதாமணி தேவியார் பேலூர் மடத்தில், இராமகிருஷ்ணர் மறைவுக்குப்பின் மாணவர்களின் அறியாமையை நீக்கி அறிவுப்பசியை யாற்றி அருட்கடலாய் விளங்கிக் கொண்டிருந்தார். அவர் வாழ்வு அடியார் பொருட்டே அமைந்திருந்தது. பலப்பல மாணவர் அன்னையின் அடிமலர் பணிந்து பலப்பல சந்தேகங்களை நீக்கிக்கொண்டார்கள். ஆ! அன்னையாருடைய வாக்கு அமுத மயமாக அமைந்து அனைவரையும் ஆட்கொண்டது.

ஒரு நாள் மாணவி மாணவக் குழாத்துள் ஒரு மாணவி சாரதாமணியம்மையின் படம் ஒன்றைக் கொணர்ந்து அன்னை சாரதாமணியாரிடம் காட்டினாள். அதனைக் கண்ட அன்னை முக மலர்ந்து அப்படத்தைத் தொட்டு கை தொழுதார்.

இதனைக் கண்ட மாணவி சிரித்தாள். "அன்னையே! உமக்கென்ன பித்தமா? உம்முடைய படத்தை நீரே தொழுகின்றீரே? தன்னைத்தானே கும்பிட்டுக் கொள்ளலாமா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டாள்.

அன்னை கூறுகின்றார். "பெண்ணே! பித்தம் எனக்கல்ல; உனக்குத்தான். நீ அறியாமையால் சிரிக்கின்றாய்? என் கருத்தையறிய உனக்கு வன்மை யில்லை.

என் உள்ளத்தில் பரமஹம்சர் வீற்றிருக்கின்றார். அவர் இடையறுது எனது உள்ளக் கோயிலில் எழுந்தருளியிருக்கின்றார். ஆகவே இந்த எனது படத்திற்குள்ளும் அவர் இருக்கின்றார். எனவே உள்ளுணர்வில் விளங்கும் பரமஹம்சரைக் கண்டு வணங்கினேன்" என்றார்.

அந்த விடையைக் கேட்ட அம் மாணவி நாணமுற்றாள். அதுமட்டுமன்று அன்னையின் உள்ளக் கமலத்தில் பரமஹம்சர் வீற்றிருக்கின்றார் என்பதையும், படத்தைக் கண்டதும் அன்னையின் பார்வை படத்தை ஊடுருவி உள்ளுணர்வாயுள்ள பரமஹம்சரைக் காண்கின்ற அருமையையும், அவர் பரமஹம்சர் பால் வைத்திருக்கின்ற அன்பின் பெருக்கையும் உன்னி உவகையுற்றாள்; விம்மிதமுற்றாள். அன்னையின் அடிமலர்மீது வீழ்ந்து, "கருத்தறியாது சிரித்த என்னை அன்னையே மன்னிக்க வேண்டும்" என்று தொழுதாள். அன்னை அன்புடன் அணைத்து ஆசிகூறினார்.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ



அடியேன் ஒரு சமயம் ஒரு அன்பர் வீட்டிற்குச் சென்றிருந்தேன். அது சமயம் அங்கு ஒரு அடிகளாரும் வந்திருந்தார். அந்த பேரன்பர் அடிகளாரை அஞ்சலி செய்து பால் பழம் நல்கி, ஒரு பதினைந்து ரூபாயைத் தமது கரத்தில் ஏந்தி அவரை எடுத்துக்கொள்ளுமாறு செய்தார்.

இங்ஙனமே அவர் பலமுறை பல அடியார்களிடம் செய்யக் கண்டேன்.

அவர் கருத்து - உள்ளம் எனக்கு விளங்கவில்லை. சிந்தித்தேன். ஒன்றும் புரியவில்லை. அவரையே மெல்ல வினவினேன்.

"ஐயா! ஒரு சிறு சந்தேகம். தாங்கள் ஒவ்வொருமுறையும் பத்து, பதினைந்து, இருபது என்ற தொகைகளைக் கையில் ஏந்தி அவர்களை எடுத்துக்கொள்ளுமாறு செய்கின்றீரே. அதற்கு என்ன காரணம்?" என்று கேட்டேன்.

அவர் சொன்னார். "தருகின்ற கை மேலே இருக்கவேணும். பெறுகின்றவன் கை கீழே இருக்கவேணும். அதனால்தான் நான் அப்படிச் செய்கின்றேன்" என்றார்.

நான் "ஐயா! நீங்கள்தான் பத்து, பதினைந்து அவர்கட்குத் தருகின்றீர். தருகின்ற கை தங்கள் கை; பெறுகின்ற கை அவர்கள் கை. ஆகவே தங்கள் கருத்து யாது?" என்றேன்.

அவர் மெல்லச் சிரித்தார். "ஓ ஓ! உங்கட்கு விளங்கவில்லை. நான் கையில் ஏந்தும் பொருள் அழிவது. அடியார்கள் தருவது அருள். பொருள் அழியும். "பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள" என்பர் வள்ளுவர்.

நான் பொருளை யீந்து அருளைப் பெறுகின்றேன். ஆகவே அவர்கள் கை அருளைத் தருகின்ற கை; என் கை அருளைப் பெறுகின்ற கை; அதனால் என் கை கீழும் அவர்கள் கை மேலுமாக இருப்பது முறைதானே" என்றார். அவருடை ஆழமான கருத்தை அறிந்து அதிசயமும் மகிழ்ச்சியும் அடைந்தேன், "ஆரறிவார் அவருள்ளம்".



உ

முருகா

# வருணசிரம தருமம்

[அன்பன் மு. பெருமாள்]

(மலர் 20-௨அஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

இச்சமயத்தில் ஒரு பெரியவர் அங்கு வந்து இவர்கள் தர்க்கத்தைக் கேட்டு புன்னகைப்புரிந்து பேசியதாவது: நீங்கள் நால்வரும் மிக மேலான தத்துவத்தைக் குறித்து சர்ச்சை செய்கின்றீர்கள். நால்வரும், பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, வேளாளர் என்ற நான்கு வகுப்பினர் என்று உரிமை கொண் டாடுகின்றீர்கள். ஆனல் நால்வரும் மரபுக்குண்டான தொழிலே விட்டு மாறுதலான தொழில் செய்து வருகின்றீர்கள் என்று தெரிகின்றது. ஆயினும் மரபின் உரிமையை மட்டும் விடாமல் மரியாதைக்காகக் காத்துக்கொள்ள முற்படுகின்றீர்கள். உண்மைப் பொருளே உணர்ந்தால் மரபுரிமை மெய்யல்ல என்பது விளங்கும்.

இப்போது ஒரு உதாரணத்தை விளக்குகின்றேன் கவனி யுங்கள். உடனே அவர் எதிரில் ஒருவர் கையில் விளக்குடன் போய்க்கொண்டிருந்தார். அவரைப் பார்த்து ஒய் விளக்குக் காரரே! சிறிது இங்கே வந்து போங்கள் என்றழைத்தார். அவர் அருகில் வந்தார். அன்பர்களே! கவனியுங்கள். இவர் பெயர் விளக்கல்ல. விளக்கை யுடையவராக இருந்ததால் அதன் பெயரை இவர்மீது வைத்து அழைத்தேன். அவரும் வந்து விட்டார். உண்மையில் அவர் பெயர் விளக்கல்ல. அவர் உண்மைப் பெயர் நாராயணசாமி என்பதைக் கேட்டு தெரி வித்தார். நாராயணசாமி என்ற உண்மைப் பெயருடைய இவர், விளக்கை எடுத்துச் செல்லுகின்ற தொழிலேச் செய்ததால், விளக்குக்காரரே என்ற காரணத்தொழிற் பெயருடையவரானர். இவரே இன்னும் சிறிது நேரத்தில் ஒரு கூடையை எடுத்துக் கொண்டு சென்ருல் இவரை அறியாதவர்கள் ஒய் கூடைக் காரரே என்றழைப்பார்கள். நாம் கூடைக்காரரே என்று "ஆர்" விகுதியிட்டு கூறுகின்ருேம். இன்னும் சிலர் இந்த "ஆர்" விகுதியையும் விட்டு; ஒய் கூடை! என்றே அழைப்பார்கள். அவரை நாம் "கூடை" என்று அழைத்தோமே. அவரும் வந்துவிட்டாரே! ஆகவே அவர் பெயர் "கூடை" என்பதுதான் என்ற முடிவுக்கு நாம் வரக்கூடாதல்லவா? இச்சமயம் இவருக்கு இப்பெயர் தொழிலால் வந்த காரணப்பெயர். உண்மைப்பெயர் நாராயணசாமி என்ற உண்மையை நாம் மறந்துவிடக் கூடாது.

அதுபோல் நாம் யாவரும் மனிதகுலம் என்ற ஒரு குலத் தைச் சேர்ந்தவர்கள். ஆயின் நாம் மேற்கொள்ளும் தொழி



லால் அதன் காரணப் பெயரிட்டு மற்றவர்களால் அழைக்கப் படுகின்ருேம். நாளடைவில் அத்தொழிற் காரணப் பெயர் மரபாக மருவி விட்டது. வழி வழியாக வளர்ந்து இன்று இன மாக நிலேத்து வருகின்றது. "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்ற உயர் வாக்கை எண்ணிப் பாருங்கள்.

பெரியாரே! வணக்கம்; ஒரே குலம் என்று கூறுகின்றீர்களே! ஆனல்..................

பெரியவர்—அன்பனே! "குலத்தளவே யாகுமாம் குணம்" என்று ஒளவை மூதாட்டியார் அறிவித்த அருள் வாக்கு பொய்யாகுமா என்ற ஐயம் உமக்கு எழுவது இயற்கையே. இங்கே "குலம்" என்ற சொல்லின் பொருளேக் கூர்ந்து ஓர்ந் திடுக. குலம் என்பது (ஜாதி) மரபைக் குறித்து வழங்கப் படும் சொல்லாகப் பொருள்படுமாயினும், அது காரணப் பெயராக எழுந்தவையே யல்லாது ஒருவனுக்குப் பிறப்பால் "குலம்" என்ற சொல் பயன்பட நியதியே யில்லே. ஏற்கனவே மேலே விளங்கியபடி ஒருவன் எத்தொழில் புரிகின்ருனே! அத் தொழிலே ஆதியில் இடுகுறிப் பெயராக அவனுக்கு அமைந்து விட்டது. மற்றவர்கள் அவனே அத்தொழிலின் காரணமாக ஒரு குலமாக்கி பெயரிட்டு அழைக்க முற்பட்டனர். பின்னர் அவன் குடும்பத்தார்களும், உறவினர்களும் அத்தொழிலே தங்கட்கு ஏற்றதெனக்கொண்டு, பின்பற்றி வாழ்ந்துவரலாயி னர். அதன் காரணமாக அவர்கள் அனேவரையும் ஒரு குல மாகவே ஆக்கி, நிரந்தரப்படுத்தி, தாங்கள் வேறு தொழி லுடையவராக யிருப்பதால் அவர்களினின்றும் தாங்கள் பிரிந்த வர்கள் என எண்ணித் தங்களேப் பிரிவினேயாக்கி ஏற்றத்தாழ் வான குலங்களேக் கற்பித்து வாழ முற்பட்டனர் மற்றவர்கள். இங்ஙனம் ஆதியில் தொழிலின் காரணமாக எழுந்த பெயர் நாளடைவில் "குலம்" என்ற பெயரால் நிரந்தரமாக்கப்பட்டது. மனித உடல் தாங்கிய எந்த ஆன்மாவுக்கும் எந்த குலமும் சொந்தமல்ல.

அன்பன்-ஆயின் ஒளவைப் பிராட்டியார் ஏன் அங்ஙனம் கூறியிருக்கவேண்டும். மேலும் பார்க்கின்ற பலர் தம் குலத் துக்கு ஏற்றபடியே இயற்கையாக நடப்பதையும் காண் கின்ருேமே!

பெரியவர்—அறிஞர் பெருமாட்டியான ஒளவை வாக்கும் பொய்யல்ல. நாம் பார்க்கின்ற பலர் தத்தம் இயற்கை குலப் படியே குணமுடையவர்களாக நடப்பதும் உண்மையே. ஆயின் "குலம்" என்ற சொல்லின் மீது குணத்தை இணைக்காது, தொழிலின் மீது குணத்தைப் பிணைக்கவேண்டும். இங்கே தொழில்தான் "குலம்" என்ற பெயராக மருவிவிட்டது. எவன் எந்தத் தொழிலே மேற்கொள்கின்ருனே, அல்லது

அன்ருடம் மனம்வைத்து, அறிவைச் செலுத்தி எத்தொழிலில் ஈடுபடுகின்ருனே; அத்தொழிலின் தன்மையே சதா பழகுவதின் காரணமாக, அவனுக்கு அது இயற்கை குணமாக அமைந்துவிடுகிறது. அதாவது யார் யார் எதை எதைச் சார்ந்து பழகுகின்றனரோ அதன் மயமாக அவர்கள் ஆகிவிடுகின்றனர். சார்ந்ததன் வண்ணமாவது இயல்புதானே! உதாரணம் வேண்டுமா? இதோ தமிழ்மறை என்ன கூறுகின்றது என்பதைச் சிந்தியுங்கள்.

> நிலத்தியல்பால் நீர்திரிந் தற்ருகும் மாந்தர்க்கு
> இனத்தியல்ப தாகும் அறிவு.

எனவே போலி ஞாயமாக தொழிலின் தன்மை குணம் என்ற பெயரால் அமைந்ததை விட்டு, குலத்தால் குணம் உண்டாவது என உரைப்பது உலகோர் மரபாகிவிட்டது. எனவே உலகோர் மரபையே உவமையாக வைத்து "குலத்தளவே யாகுமாம் குணம். என்று ஔவைப் பெருமாட்டியார் அறிவித்துள்ளார். ஆகவே "குலம்" என்பது ஒன்றில்லை. தொழில்தான் "குலம்" என்று போலியாக பெயர்கொண்டது என்பதை உணர்க.

மேலும் இங்கே கூடியுள்ள நீங்கள் நால்வரும் நான்கு வருணத்தைச் சேர்ந்தவர்கள் என்று உரிமை பாராட்டித் தர்க்கமிடுகின்றீர்கள். இது சரியல்ல; உண்மையுமல்ல. நீங்கள் நால்வரும் ஒரே குலமாகிய மனித குலத்தவர்கள் என்பதுதான் சரி. ' ஒன்றே குலம் ஒருவனே தேவன் '' என்ற கபிலர் வாக்கை கவனித்து கருத்தில் நிறுத்துக.

> "சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிபட்டுத் தடுமாறும்
> ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு"

என மணிவாசகனுரும்,

> சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே
> சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
> ஆதியிலே யபிமானித் தலைகின்ற வுலகிர்
> அலைந் தலைந்து வீணேநீ ரழிதலழ கலவே.

என வள்ளலாரும் வருந்தி இரக்கமுற்று வரைந்து காட்டியுள்ளனர் என்று கூறினர் பெரியவர். நால்வரும் எழுந்து வணங்கி தங்கள் விளக்கத்தால் தெளிவடைந்தோம். இனி எங்கள் குலந்தான் உயர்ந்தது என்று எங்கும் பேசோம். உண்மையை உணர்ந்தோம். உள்ளம் மகிழ்ந்தோம் என்று கூறி பெரியவரைப் போற்றிப் புகழ்ந்து விடை பெற்று உறங்க முற்பட்டனர்.

(தொடரும்.)

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந் திருப்புகழைக் கேளீர் தினம்''

மலர் 21 | துன்முகி ஆண்டு வைகாசித் திங்கள் மே-1956 | இதழ் 2

## திருப்புகழ்

### திருச்செந்தூர்

பெருக்கச்சஞ் சலித்துக்கந்
தலுற்றுப்புந் தியற்றுப்பின்
பிழைப்பற்றுங் குறைப்புற்றும் — பொதுமாதர்

ப்ரியப்பட்டங் கழைத்துத்தங்
கலைக்குட்டங் கிடப்பட்சம்
பிணித்துத்தந் தனத்தைத்தந் — தணையாதே

புரக்கைக்குன் பதத்தைத்தந்
தெனக்குத்தொண் டுறப்பற்றும்
புலத்துக்கண் செழிக்கச்செந் — தமிழ்பாடும்

புலப்பட்டங் கொடுத்தற்கும்
கருத்திற்கண் படக்கிட்டும்
புகழ்ச்சிக்குங் க்ருபைச்சித்தம் — புரிவாயே

தருக்கிக்கண் களிக்கத் தெண்
டனிட்டுத்தண் புனத்திற்செங்
குறத்திக்கண் புறச்சித்தந் — தளர்வோனே

சலிப்புற்றங் குரத்திற்சம்
ப்ரமித்துக்கொண் டலேத்துத்தன்
சமர்த்திற்சங் கரிக்கத்தண் டியசூரன்

சிரத்தைச்சென் றறுத்துப்பந்
தடித்துத்திண் குவட்டைக்கண்
டிடித்துச்செந் திலிற்புக்கங் குறைவோனே
சிறக்கற்கஞ் செழுத்தத்தந்
திருச்சிற்றம் பலத்தத்தன்
செவிக்குப்பண் புறச்செப்பும் பெருமாளே.

## பதவுரை

தருக்கி – மகிழ்ச்சி யடைந்து, கண் களிக்க – அம்மையின் கண்கள் களிக்குமாறு, தெண்டனிட்டு-வணங்கி, தண்புனத்தில்-குளிர்ந்த தினேப்புனத்தில், செம் குறத்திக்கு அன்பு உற - செவ்வையான வள்ளிபிராட்டியாரிடம் அன்புவளர, சித்தம் தளர்வோனே -உள்ளந் தளர்ந்தவரே! சலிப்பு உற்று – தேவர்கள் சோர்வடையுமாறு, அங்கு உரத்தில் - அவ்விடத்தில் தனது வலிமையால், சம்ப்ரமித்து-பெருமையுடன் சென்று, கொண்டு அலேத்து – அந்த அமரர்களேப் பிடித்து வருத்தி, தன் சமர்த்தில் சங்கரிக்க தண்டிய சூரன் - தனது ஆற்றலால் அவர்களின் வாழ்வை யழித்துத் தண்டித்த சூரபன்மனுடைய, சிரத்தை சென்று அறுத்து பந்து அடித்து - தலேயைப் போர்க்களம் போய் அறுத்து அத்தலேயைப் பந்துபோல் அடித்து, திண்குவட்டை கண்டு இடித்து - வலிமையுடைய கிரவுஞ்ச மலேயைப் பார்த்து அம்மலேயைப் பொடிபடுத்தி, செந்திலில் புக்கு அங்கு உறைவோனே - திருச்செந்தூரில் சென்று அத்திருத்தலத்தில் எழுந்தருளியிருப்பவரே! சிறக்கற்கு - மேன்மை யடையும் பொருட்டு, அஞ்சு எழுத்து அத்தம் - திருஐந்தெழுத்தின் பொருளே, திருச்சிற்றம்பலத்து அத்தன் செவிக்கு - திருச்சிற்றம்பலத்தில் திருநடம்புரியும் தந்தையாகிய சிவபெருமானுடைய திருச்செவியில், பண்பு உற செப்பும் - முறையுடன் உபதேசித்த, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! பெருக்க சஞ்சலித்து - மிகுந்த துன்பத்தை யடைந்து, கந்தல் உற்று-ஒழுக்கக்கேட்டை யுற்று, புந்தி அற்று - அறிவையும் இழந்து, பின் பிழைப்பு அற்றும் - பின்னர் உய்யும் நெறியும் நீங்கியும், குறைப்பு உற்றும் - குறைவை யடைந்தும், பொது மாதர் ப்ரியப்பட்டு - பொது மகளிர் என்னேக் கண்டு ஆசைகொண்டு, அங்கு அழைத்து - அவர்கள் தங்குமிடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய், தம் கலேக்குள்



தங்கிட பட்சம் பிணித்து - தமது காமசாத்திரத்திற்குள் என்னேத் தங்கும்படிச் செய்துஆசைகாட்டிக் கட்டிப்பிடித்து,தம் தனத்தை தந்து அணேயாதே - தங்கள் தனபாரங்களேத் தந்து என்னேத் தழுவா வண்ணம், புரக்கைக்கு - அடியேனேக் காத்தற் பொருட்டு, உன் பதத்தை தந்து - தேவரீருடைய திருவடியைத் தந்தருளி, எனக்கு தொண்டு உற - அடியேன் திருத்தொண்டு நெறியில் நின்று, பற்றும் புலத்துக்கண் செழிக்க - ஆன்ருேர்கள் பற்றும் அறிவு நிலேயில் அடிமையேன் தழைக்கவும், செந்தமிழ் பாடும் புல பட்டம் கொடுத்தற்கும்-செம்மைப் பண்புடைய தமிழ்பாடும் புலவன் என்னும் பட்டத்தைத் தக்கவர்கள் கொடுப்பதற்கும், கருத்தில் கண்பட கிட்டும் புகழ்ச்சிக்கும் – கருத்திலே அறிவுக்கண் விளங்கும்படியான புகழைப் பெறுவதற்கும், க்ருபை சித்தம் புரிவாயே - கருணேத் திருவுளஞ் செய்து அருள் புரிவீர்.

## பொழிப்புரை

வள்ளி நாயகி மகிழ்ந்து கண்களிக்குமாறு வணக்கஞ் செய்து குளிர்ந்த தினேப்புனத்தில் செவ்விய அக்குறமகளின் பால் அன்பு கொண்டு உள்ளந் தளர்ச்சியுற்றவரே! தேவர்கள் துன்புறுமாறு வலிமையுடன் விறு பெற்று அவர்களேச் சிறை பிடித்து அலேத்து அவர்களது வலிமையை அழித்துத் தண்டித்த சூரபன்மனது தலேயை யுத்தகளம் போய் அறுத்துப் பந்தாடி, கிரவுஞ்சமலேயைப் பார்த்து இடித்து, திருச்செந்தூரின் கண் எழுந்தருளியிருப்பவரே! சிறப்புறுமாறு திருச்சிற்றம்பலத்திலே திருநடம்புரியும் தந்தையாருக்கு திரு ஐந்தெழுத்தின் பொருளே முறைப்படி உபதேசித்த பெருமிதம் உடையவரே! மிகவும் துன்புற்று, ஒழுக்கக்கேட்டை யடைந்து நல்லறிவை யிழந்து பின்னர் உய்யும் தன்மையும் இன்றி குறைவுபட்டழியுமாறு, பொதுமகளிர் என்பால் ஆசைவைத்து அவர் உறைவிடத்திற்கு அழைத்துச் சென்று, அவர்கள் கற்ற காமநூலில் தங்கும்படி அன்பு செய்து என்னேக் கட்டுப்படுத்தி கொங்கைகளேத் தந்து தழுவி மயக்காவண்ணம், சிறியேனே இரட்சித்து உமது திருவடியைத் தந்தருளி என்னேத் தொண்டு நெறியிற் செலுத்தி, ஆன்ருேர்கள் பற்றும் அறிவு நிலேயில் தழைக்குமாறு செந்தமிழ் பாடும் புலவன் என்று தக்கவர்கள் பட்டந்தரவும், கருத்தில் ஞானக்கண் விளங்கும் புகழுக்கு உரியவனுகுமாறும் செய்து உமது கருணே நிறைந்த திருவுள்ளம் இரங்கி அருள்புரிவீர்.

## விரிவுரை

பெருக்கச் சஞ்சலித்து:—

துன்பம் ஆசையினுல் விளேகின்றது; ஆசை மண்ணிலும் பொன்னிலும் பெண்ணிலும் விரைந்து செல்கின்றது. மண்

ணுசையும், பொன்னுசையும் மனிதப் பிறப்பில் மட்டுந்தான் விளையும். பெண்ணுசை பிறவிகள்தோறும் தொடர்ந்து வந்தது. புழுவுக்கும் பெண்ணுசையுண்டு.

ஆகவே பெண்ணுசை மேலிட்டு அதனுல் பெருந்துன்புறுவர் பலர்.

பெண்ணுசையால் தனது அளவற்ற செல்வத்துடனும் குலத்துடனும் அழிந்தான் இராவணன். உண்டால் மட்டுங் கொல்லும் நஞ்சு. கண்டாலுங் கொல்லும் வலிமையுள்ளது காமம்.

இராவணன் மாண்டபின் வீடணன் இரங்கியதாக வரும் கம்பர் கவியும் ஈண்டு நினைவுகூரற்பாலது.

"உண்ணுதே யுயிருண்ணு தொருநஞ்சு
சனகியெனும் பெருநஞ் சுன்னைக்
கண்ணுலே நோக்கவே போக்கியதே
உயிர் நீயுங் களப்பட்டாயே"

எனவே பெண்ணுசை விட்டவன் பெருந் துன்பமடையான். அதனுல்தான் இராமலிங்க அடிகளாரும்,

"மருவு பெண்ணுசையை மறக்கவே வேண்டும்" என்ருர்.

கந்தலற்று:—

கந்தல் - ஒழுக்கக்கேடு. உள்ளத்தில் பல ஒட்டையுற்று தீமைகளை நினைந்து, கொடுஞ் செயல்கள் புரிந்து கெடுவது.

புந்தியற்று:—

புத்தியற்று மடமையுறுதல். காமங் கதுவப் பெற்ருர்க்கு அறிவு தொழிற்படாது. அறிவின் மயக்கத்தால் நன்மை தீமைகளை யுணராது கெடுவர்.

நூறு அசுவமேத மகம்புரிந்து இந்திரபதம் பெற்ற நகுஷன் காமத்தால் அறிவிழந்து, எழு முனிபுங்கவர்களைப் பல்லக்குச் சுமக்கச் சென்று அகத்திய முனிவர் சாபத்தால் மலைப்பாம்பாக விழுந்தான்.

பின் பிழைப்பற்று:—

அறிவு மயங்கியபடியால் உய்யுநெறி யறியாது உழலும் தன்மை யடைவர்.

குறைப்புற்றும்:—

குறையுற்று என்பது சந்தத்தை நோக்கி வல்லின மெய் பெற்று வந்தது.



ஆசையால் அறிவு பொருள் பெருமை முதலிய பல நலங்கள் குறைந்துபோகும்.

பொதுமாதர் ப்ரியப்பட்டங்கழைத்து:—

பொதுமகளிர் நடுவீதியில் நின்று, வீதியிற் செல்லும் இளைஞரை வலிதில் அழைத்து நகைத்து இங்கிதமாகப் பேசி, "என் இங்கு நின்று பேசவேணும்; இதோ இருக்கின்ற என் வீட்டிற்கு வாருங்கள்" என்று கூறி மாயம்புரிவர்.

"இங்கு நின்ற தென்வீடே வாரீர்
என்றிணங்கிகள் மாயாலீலா
இன்பசிங்கியில் வீணே வீழா தருள்வாயே"
—திருப்புகழ்.

தங்கலைக்குட் டங்கிட:—

தமது கலையாகிய இன்ப நூலின் திறத்தால் மயங்கப் புரிவர்.

கலை என்ற சொல்லுக்கு ஆடை யெனப் பொருள்புரிந்து, தமது ஆடைக்குள் அணைத்தும் மயக்குவர்.

பட்சம் பிணித்துத் தந்தனத்தைத் தந்து:—

பட்சம்—அன்பு.

அன்பு காட்டி ஆடவரை வசஞ் செய்து தனமளித்துத் தனம் பெறுவர். "இவ்வாறு மயக்கும் பொதுமகளிர் வசப்படா வண்ணம் தடுத்து ஆட்கொள்ள வேண்டும்" என்று பின்னுள்ள இரண்டடிகளில் தெரிவிக்கின்ருர்.

புரக்கைக்குன் பதத்தைத் தந்து:—

"முருகா! அடியேனை ரட்சிக்கும் பொருட்டு உமது கிரியா ஞான வடிவாகிய திருவடிகளைத் தந்து உபகரிக்க வேணும்.

தொண்டுறே:—

உலகில் தொண்டு புரிவதே சாலவும் சிறந்ததாகும். தொண்டுபுரிவதனுல் தொண்டர் எனப் பெறுவர். நாயன்மார்கள் அனைவரும் தொண்டர்களே. அதனுல் அவர்களுடைய புராணம் திருத்தொண்டர் புராணம் எனப்பட்டது. "தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்றனர் ஔவையார்.

ஆதலால் அன்பர்கள் அனைவரும் தத்தம் தகுதிக்கு ஏற்ப மனவாக்கு காயங்களாலே ஏதாவது திருத் தொண்டு புரிய வேண்டும்.

**பற்றும் புலத்துக்கண் செழிக்க:—**

புலம்—ஞானம். ஞானமுள்ளவர் புலவர். அறிவு நிலையில் செழிக்கவேணும்.

**செந்தமிழ்பாடும் புலப்பட்டங்கொடுத்தற்கும்:—**

முருகப்பெருமானையே இனிய செந்தமிழ் மொழியால் கவி மாலை பாடி அதனால் புலவர் மணி என்று தக்கவர்கள் பட்டங் கொடுக்கப் பெறவேணும் என்கின்றார் அடிகளார்.

**கருத்திற் கண்படக் கிட்டும் புகழ்ச்சி:—**

உள்ளத்தில் ஞானக்கண் திறக்கப்பெற்று அதனால் எல்லாவற்றையும் அறிந்து புகழ் பெறுதல். அது உணர்வு விழி என்று பேர் பெறும்.

"உடலு முடலுயிரு நிலை பெறுதல் பொருளெனவுலக
மொருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபரவசமழிய விழிசெருகி
உணர்வுவிழிகொடு நியதி தமதூடு நாடுவதும்"—திருவகுப்பு.

யுகஇறுதிகளிலும் இறுதியில் ஒரு பொருள்
உள்ளக்கணேக்கும் அறிவூறி
ஒளிதிக ழுருவுரு வெனுமறை யிறுதியில்
உள்ளத்தை நோக்க அருள்வாயே.

**க்ருபைச் சித்தம் புரிவாயே:—**

"கருணை நிறைந்த கடவுளே! அடியனேன் உய்யும்பொருட்டு கிருபைச்சித்தம் என்பால் திரும்பி அருள்புரிவீர்" என்று சுவாமிகள் உளங் கனிந்து வேண்டி நிற்கின்றனர்.

"அரியபெண்கள் நட்பைப் புணர்ந்து
பிணியுழன்று சுற்றித்திரிந்த
தமையுமுன் க்ருபைச் சித்தமென்று பெறுவேனே"
—திருப்புகழ்.

**தருக்கிக் கண்களிக்கத் தேண்டனிட்டு:—**

வள்ளியம்மையார் மகிழ முருகவேள் வேடவடிவிற் சென்று வணங்கினர் என்ற குறிப்பு, ஆன்மாக்களை இறைவன் எளிமை யாகச் சென்று ஆட்கொள்கின்றான் என்பதனை உணர்த்து கின்றது.

**குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே:—**

வள்ளிபிராட்டி உய்வு பெற வேண்டும் என்று பெருமான் அவர் விஷயத்தில் எல்லையற்ற கருணையால் உள்ளம் இரங்கு கின்றான். காரணம் வள்ளியம்மை புரிந்த தவமேயாகும்.



**சிறக்கற்கு:—**

உலகமெல்லாம் குரு நெறியையுணர்ந்து மேன்மையடையும் பொருட்டு முருகன் உபதேசம்புரிந்து அருளினர்.

**அஞ்செழுத்தத்தம்:—**

திருஐந்தெழுத்தின் பொருள் பிரணவத்தின் உட்பொருளே யாகும்.

**திருச்சிற்றம்பலத்தன்:—**

சிறு அம்பலம் சிற்றம்பலம். அது ஆன்மாக்களின் இதய புண்டரீகத்துக்குள் விளங்கும் சிறு வெளி. அது ஞானமய மானது. அந்த வெளிக்கு தகராகாசம் எனவும் பேருண்டு. தகரம்—நுட்பம். "இதனையே மலர்மிசை யேகினன்" என்பர் திருவள்ளுவதேவர்.

## கருத்துரை

வள்ளி கணவரே! சூரனாகிய ஆணவத்தை யழித்த செந்திற் குமாரமூர்த்தியே! சிவகுருவே! மாதர்மயக்கிற் படாது, தேவரீரைத் தமிழ்பாடி உய்ய அருள்புரிவீர்.

---

உ
முருகா

## விதி

விதி என்பது விதிக்கப் பெறுவது ஆகும். யார் விதிக் கின்றார்? யாருக்கு விதிக்கின்றார்? ஏன் விதிக்கின்றார்? எவ் வாறு விதிக்கப்பெறுகின்றது. என்பனவாதி சில வினாக்கள் எழும். இவைகள் நமது சிந்தனைக்கு உரியன ஆகும்.

சிந்திக்கின்ற மனிதன் வந்திக்கப் பெறுவான். நிந்திக்கப் பெறமாட்டான்.

அகில வுலகங்களையும் காத்தும் படைத்துங் கரந்தும் அருள்புரிகின்ற இறைவன் ஒருவன் உளன். "ஆதிபகவன் முதற்றே உலகு" என்பார் திருவள்ளுவர். தலையில்லாத உடம்பு இல்லாததுபோல் தலைவன் இன்றி உலகம் இராது. ஆனால் இறைவன் கட்புலனுக்குத் தோன்றாமையால் உண்டோ? இல்லையோ? என ஐயுறுவர் சிலர். நமது உடம்புக்குள் உறையும் உயிரும் கட்புலனுக்குத் தோன்றாததுதானே. உயிர் கண்ணுக்குத் தோன்றாமையால் "நான் உயிர் இல்லாதவன்" என்று சொல்லலாமா?

இறைவன் என்ற சொல் "இறு" என்ற பகுதியடியாகப் பிறந்தது. எங்கும் தங்கி நீக்கமற இருப்பவன் இறைவன். பூவினில் உள்ள மணத்தைக் கண்ணால் காணமுடியாததுபோல் இறைவனையும் இந்தக் கருவி கரணங்களால் காணமுடியாது.

அருட்கண் கொண்டே காணத்தக்கவன் இறைவன். அருளே இறையை அடையும் அருநெறி. ஆகவே எங்கும் நிறைந்தவராய் எல்லாம் அறிகின்றவராய், இன்ப மயமானவராய் விளங்கும் பதி அநாதியே ஆணவமலத் தொடர்புடைய ஆன்மாக்கள் அம்மல நீக்கம் பெற்று உய்யும் பொருட்டு இவ்வுடம்பையும் கருவிகரணங்களையும் உலகங்களையும் நுகர்வுப் பொருள்களையும் உண்டாக்கித் தந்தனர். அது அவருடைய எல்லையில்லாத கருணையினால் விளைந்த விளைவு.

அங்ஙனம் ஆன்மாக்கள் கேவலநிலையிலிருந்து பெத்த நிலைக்கு வந்தபின் புரிகின்ற நல்வினை தீவினைக்கு இணங்க, சுகதுக்கங்கள் விளைகின்றன. சென்ற ஆண்டு விளைவித்த விளைபொருள் இந்த ஆண்டு உணவுக்கு உதவுவது போல், முன் பிறப்பிற் செய்த தீவினை நல்வினை இப்பிறப்பில் இன்ப துன்பங்களாக வந்து அநுபவிக்கப்படுகின்றன. வினை அறிவற்ற சடப்பொருளாதலின் தானேவந்து செய்தவனைப் பொருந்தாது. ஆகவே எல்லாம் அறிந்த இறைவன் அவரவர் புரிந்த வினைகளை இன்னின்ன காலத்தில் இப்படி இப்படி நுகர வேண்டும் என்று விதிக்கின்றார். அதுவே விதியாகின்றது.

இன்னாருக்கு இன்னபடி என்று நியாயத் தீர்ப்புக் கூறியே நாம் அனைவரும் இந்தவுலகில் வந்து, பிறந்திருக்கின்றோம். நாம் நம் விருப்பப்படி தாய் தந்தைகளையும் ஊரையும் உருவத்தையும் எடுத்துக்கொள்ள முடியாது. ஆணாகப் பிறக்கவோ பெண்ணாகப் பிறக்கவோ நம்மால் முடியாது; நாம் விரும்பியா அப்படிப் பிறக்கின்றோம்?

இறைவன் கருணை நிறைந்தவர். பாரபட்சம் இல்லாதவர். ஆதலின் அவர் விருப்பப்படியும் பிறக்கவைப்பதில்லை. நாம் செய்த வினைக் கீடாகவே இப்பிறப்பும் தாய்தந்தையரும் உருவமும் ஊரும் அடைய இறைவன் விதிக்கின்றான்.

ஒருவன் ஒரு சிறந்த புலவர் - புகழ் பெற்ற பெருந்தகையாளருக்கு மகனாகப் பிறக்கின்றான். இன்னொருவன் கள்குடியன்- கொலைஞன்—இகழ்வுக்குரிய ஒரு தீயவனுக்கு மகனாகப் பிறக்கின்றான். ஒருவன் பெருந் தனவந்தனுக்கு மகனாகவும் மற்றொருவன் பரம ஏழைக்கு மகனாகவும் பிறப்பதற்கு என்ன காரணம்? நன்கு சிந்தியுங்கள். அவனவன் செய்த வினைகளே காரணம். அவ்வினைக்கு ஏற்றபடி விதியமைகின்றது.



நீதிபதி அவனவன் செய்த செயலுக்கு ஏற்றவாறு நீதி கூறுகின்றார். அதுபோல் ஆண்டவனும் நமது ஒவ்வொரு எண்ணங்களையும், ஒவ்வொரு செயல்களையும் ஒவ்வொரு சொற்களையும், அறிகின்றவர் ஆதலின், மனவாக்குச் செயலால் அமைகின்ற நல்வினை தீவினைக்கு ஏற்ப விதித்து அனுப்புகின்றார்.

இதனை இதனை இவன் இப்படி இப்படி நுகரவேண்டும், இவ்வண்ணம் வாழவேண்டும் என்று எல்லாம் வல்ல ஈசன் வகுத்தனன் என்பதைத் தெளிவாகத் தெய்வப்புலவர் திருவள்ளுவதேவர் கூறுகின்றார்.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது.

இத்திருக்குறள் எத்துணை தெளிவாகப் பெரியபொருளை- அரிய கருத்தை நமக்குப் புலப்படுத்துகின்றது என்பதை எண்ணுந்தொறும் விம்மிதம் விளைகின்றது.

இளமையும் வளமையும் உடற்கட்டும் அவசர மதியும் உடைய சிலர், "விதியாவது மதியாவது? இவை யெல்லாம் வீண் பிதற்றல். விதி விதி யென்று சொல்லி மதியையிழக்கக் கூடாது. எல்லாம் நம்மாலேயே நடைபெறுகின்றன" என்று கூறுவர். அவர் கூற்று திருவள்ளுவனார், திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர், அருணகிரிநாதர் முதலிய ஆன்றோர்களுடைய அநுபவ அறவுரைக்கு மாறுபட்டது.

ஆனால் விதியை மறுப்பவரும் ஒரு சமயம் அநுபவத்திற்கு வரும்போது ஒப்புக்கொள்வர். அப்படி ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியாது.

தயரதர் நாளை இராமருக்கு முடி சூட்டுவது என்று நியமனம் புரிந்தார். அன்றிரவு கைகேயி மன்னரிடம் இருவரங்கள் வாங்கினாள். ஒருவரம் பரதன் நாடாள்வது; ஒருவரம் இராமன் பதினான்கு ஆண்டு வனம் போவது. தந்தை சொல்லைத் தலைமேற்கொண்டு ஸ்ரீராமர் வனம் போகப் புறப்பட்டார்.

இதனை யறிந்த இலட்சுமணன் சீறியெழுந்தார். "ஆ! ஆ! இது என்ன நியாயம்? மூத்தவன் இருக்க இளையவன் அரசாள்வதா? மன்னவனிடம் கைகேயியும் வரம் வாங்குவாள்; மன்னவனும் வரந்தருவான்; ராமரும் காடு போவார்; பரதனும் நாடாள்வான். இலக்குவன் ஒருவன் இல்லையானால் இத்தனையும் நடக்கும். நானே என் அண்ணனுக்கு முடிசூட்டுவேன். தடுக்க வலிமையிருந்தால் தடுக்கலாம். தடுப்பவர் தலைகளை மலைகளாகக் குவிப்பேன்" என்று கூறி ஆரவாரஞ் செய்தான். வில்லையெடுத்து வளைத்து நாணினை மாட்டி வில்லோசை செய்தான்;

வில்லோசை சொல்லோசைகளால் மண்ணும் விண்ணும் அதிர்ந்தன.

ஓசையைக் கேட்ட ராமர் ஓடி வந்தார். ஒரு குடத்தின் நீர் சூடு பெற்று கொதிக்குமானால் கிணற்று நீர் கொணர்ந்து ஆற்றலாம். கிணற்று நீரே கொதிக்குமானால் எதனை விட்டு ஆற்றுவது? கடலே வந்து ஆற்ற முயன்றது போல் கருணைக் கடலாகிய ஸ்ரீராமர் விரைந்துவந்தார்.

"தம்பி! கோபம் விளையாத இந்த நிலத்தில் உனக்கு எவ்வாறு விளைந்தது. வில்லேந்திப் போருக்கு ஆயத்தமாக நிற்கின்றனையே? காரணம் யாது?" என்று கேட்டார் ஸ்ரீராமர்.

"அண்ணா! தங்கள் முடிசூடலுக்கு இடர் புரிகின்றவரை இந்த வில்லம்பால் கொல்வேன்" என்றான் இளையவன்.

"தம்பி! ஒரு நதியில் தண்ணீர் இல்லையானால் "நதி ஒழிக" என்று கூப்பாடு போடலாமா? அது அறிவுடைமையாகுமா? ஆகவே நான் வனம் போவது என்பது விதிசெய்தது. பிதாவின் மீதும் பிழையில்லை. தாய் கைகேசியின் மீதும் பிழையில்லை. தம்பி பரதன் மீதும் பிழையில்லை; விதி மீது பிழை. விதியை நோவாமல் யாரை நோவது" என்றார் சாந்த மூர்த்தியாகிய ஸ்ரீராமர்.

"அண்ணா! விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் காண்டி; விதி விதி யென்று மதியை யிழக்கக் கூடாது. விதிக்கும் விதி காண்பேன்" என்று ஆர்த்தனன்.

இராமர் அந்த வேளையில் அவனுடைய கொதிப்புற்ற அறிவில் விதியின் சூட்சுமத்தை ஏற்ற முடியாது என்று கருதினார். "தம்பி! மறைதந்த நாவால் வாய்தந்தன கூறுதியோ? நன்று; தாய் தந்தையர்மீது சலிக்கலாமோ?" என்றார்.

"தயரதன் எனக்குத் தந்தை யன்று. சுமித்திரையும் கைகேயியும் எனக்குத் தாயன்று; நற்றாதையுநீர்! தனிநாயகனீர்! வயிற்றில் பெற்றாயுநீர்! பிறரில்லை. சற்றுபொறும்; உமது மகுடாபிஷேகத்திற்கு இடையூறாக நின்றாரையெல்லாம் சாம்பராக்கி பதினாலு உலகங்களுக்கும் உம்மைத் தலைமையாகச் செய்து முடிசூட்டுவேன்" என்று கூறி இராமர் கரத்தைப் பிடித்தார் இலட்சுமணர்.

இராமர், "தம்பி! நல்லது. எனக்கு நன்சொற்கள் தந்து நாளும் வளர்த்த தந்தை தன்சொற் கடந்து அரசாள்வது தக்கதன்று; உனக்கு தந்தையாகிய என் சொற்கடத்தல் உனக்குக் கடனன்று" என்றார். இதைக் கேட்ட இலட்சுமணர் அடங்கி தலைகவிழ்ந்து தமயனுடன் புறப்பட்டார்.



இந்த நிகழ்ச்சி நிகழ்ந்து பதின்மூன்று ஆண்டுகளும் இரண்டு மாதங்களும் கடந்தன.

பஞ்சவடியில் இராமரும் சீதையும் இலட்சுமணரும் வசிக்கின்றார்கள். பொன் மானைக் கண்ட அன்னை ஜானகி கணவனை யழைத்து "இம்மானைப் பற்றிக் கொடும்" என்றாள்.

"அண்ணா! இது பொய்மான்; அசுரமாயை; தாங்கள் மான் பின்னே போகவேண்டாம். பேராபத்து வரும்; வேணுமானால் மான் பிடிக்க நான் போகின்றேன்" என்று லட்சுமணர் தடுத்தார்.

"தம்பி அவசரப்பட்டு மானைக் கொன்று போடுவார்; தாங்களே சென்று பிடித்துவாரும்" என்று வற்புறுத்தினாள் சீதை.

இராமர் "தம்பி! உன் அண்ணியின் விருப்பத்தை நிறைவேற்றுவது என் கடமையல்லவா? அசுரமாயை என்றால் ஒரு கணையால் அழிப்பேன். நீ காவலாக இங்கு நில்" என்று கூறிவிட்டு, இராமர் மான் பின்னே சென்றார்.

மான் நெடுந்தூரம் அவரை அலக்கழித்தது. இறுதியில் அதனை இராமர் கணைவிட்டுக் கொன்றார். மானாக வந்த மாரீசன் மாளும்போது ராமர் குரல் போல் கூவி "ஆ சீதா! ஆ லட்சுமணா!" என்று அலறிவீழ்ந்தான்.

அக்குரலைக் கேட்ட சீதை "தம்பி! அண்ணாவுக்கு ஆபத்து; உன் பேரையும் என் பேரையும் இட்டு அலறுகின்றார். விரைந்து சென்று உதவி செய்" என்றாள்.

இலட்சுமணர், "அண்ணி! இது அசுரமாயை. மாரீசன் குரல். எமது அண்ணனை யாரென்று எண்ணினாய்? அவர் சுண்டு விரல் அசைந்தால் அண்டங்கள் அசையும்; அவர் கடைக் கண் சிவந்தால் கடல் வற்றிப்போகும். ஒருவராலும் எடுக்கமுடியாத உருத்திர தனுவை ஒடித்ததை நீர் காணவில்லையா? ஆதித்தன் குலத்தை இருபத்தொரு தலைமுறை கொன்ற பரசுராமனை ஒரு கணப் பொழுதில் வென்றதை நீர் அறியீரா? நான் பிரிந்தால் உமக்கு ஆபத்துவரும்" என்றார்.

சீதை, "இலட்சுமணா!

ஒருபகல் பழகினர் உயிரை யீவரால்
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டுநீ
வெருவலை நின்றனை வேறென் யானினி
எரியிடை வீழ்ந்துயிர் இறப்பல் ஈண்டென.

நீ மாற்றாந்தாய் பிள்ளை; தமையனுக்கு இடர் என்று கேட்டு உன் உள்ளம் பதறவில்லை. அண்ணன் உடைமை

செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

என்கின்ற திருக்குறளை நான் இளமையிலேயே படித்திருக்கின்றேன். ஆகவே நான் தங்களைப் பிரிந்து தன்னந்தனியே எவ்வாறு இருப்பேன்? இந்த ஊரில் எனக்கு வேறு துணை எவர் உளர்? காலம் கெட்டுக் கிடக்கின்றது. அதர்மம் அமர்க்களம் புரிகின்றது. கொலையுங் களவுங் கூத்தாடுகின்றன. இத்தகைய நகரத்தில் நான் எவ்வாறு தனித்திருப்பேன்? சுவாமி! என் உள்ளம் கவல்கின்றது. தாங்கள் கருணை கூர்ந்து நின்றுவிடுங்கள். பணம் பெரிதன்று. பணம் நிலையில்லாதது. பணம் தேடும்போதும் துன்பம்; அதனைச் செலவழிக்கும் போதும் துன்பம். அது களவு போனால் கணக்கில் துன்பம்; பொருளால் மனம் இருளும். பொருள் படைத்தவன் ஆறுதலாகத் தூங்கமாட்டான். பொருள் கொண்டு பிரயாணம் புரிகின்றவன் மனம் வழியில் அஞ்சியவண்ணமாகவே இருக்கும். "செல்வமென்னும் பல்கடல் பிழைத்தும்" என்கின்றார் மாணிக்கவாசகர். அவாவே நல்குரவு; போதுமென்ற மனமே பூங்காவனம். ஆதலால் தாங்கள் இந்த ஊரிலேயே ஏதாவது வேலை பார்த்துக்கொண்டு இருங்கள். எனக்கு நகைகள் வேண்டாம்; பட்டாடை வேண்டாம். தங்கள் ஆசியும் வெண்ணீறும் இருந்தால் போதும்'' என்றாள்.

அவள் அமுதமொழி அவன் உள்ளத்தை உருக்கியது. ஆ! அவள் அன்பு அவனைத் தடுத்தது. கண்ணிறை நீர் கொண்டு நின்ற அக் கற்புக்கரசியின் காதல் அவன் மனத்தில் ஒரு மாற்றத்தை யுண்டாக்கியது.

அவர்கள் இருவரும் உள்ளதைக் கொண்டு திருப்தி யடைந்தார்கள். கொஞ்சம் வருமானத்தினால் ஒருவேளை யுண்டும் ஒரு வேளை பட்டினி கிடந்தும் தாங்களே ஆடைகளைத் தோய்த்துக் கொண்டும் சிக்கனமாக வாழ்ந்தார்கள். துன்பம் புறத்திலேயிருந்ததன்றி உள்ளத்திலே யில்லை. ஒருவரை யொருவர் உள்ளன்புடன் நேசிப்பதனால் மனத்தில் மட்டற்ற மகிழ்ச்சி. அன்புடன் காலங் கழித்தார்கள். முகமலர்ந்து அகங்குளிர்ந்து வாழ்ந்தார்கள்.

வறுமை நோய் ஒரு புறம் வாட்டிக்கொண்டே யிருந்தது. நல்ல உழைப்பாளியாகிய குணாகரன் மீண்டும் அயல் நாடு போகத் திட்டமிட்டான். மனைவிக்குச் சொன்னால் வருந்துவளே யென்றுங் கருதினான். இங்ஙனம் மனம் இப்படியும் அப்படியுமாக ஊசலாடியது. மனைவியின் அன்பு ஒருபுறம்; வறுமையின் வாட்டம் மற்றொரு புறம். முடிவில் புறப்படுவதென்ற முடிவுக்கே வந்தான்.

தான் சென்றால் மனைவிக்கு ஆதரவு இல்லையே யென்ற கவலை பெரிதும் அவனை வாட்டியது. உணவுப்பண்டங்கள் இரண்டு மூன்று மாதங்களுக்கு ஆகும்படி வாங்கிவைத்துவிட்டால் சற்று ஆறுதலாக இருக்கும். அதற்குப் பணம் வேண்டும். தன்னுடைய அயல்நாட்டின் பிரயாணச் செலவுக்கும் பணம் வேண்டும். என்ன செய்வான். அவனை நம்பிக் கடன் தருவார் யார்? அடகுவைக்க ஆபரணங்களுமில்லை. பலப்பல நண்பர்களிடம் ஓடினான்; ஓடிப் பயன் யாது? நண்பர்கள் எல்லோரும் கையை விரித்துவிட்டார்கள்; ஏழைக்கு உதவுபவர் குதிரைக் கொம்புதானே. குணகரனுக்கு மனம் உடைந்துவிட்டது. என்செய்வான்? ஏங்கினான்.

இரவு 11 மணி யிருக்கும். இறந்துவிடுவது என்று துணிந்தான். மெல்ல எழுந்தான். கதவைத் திறந்துகொண்டு புறப்பட்டான். சிறிது தொலைவில் ரயில்வே தண்டவாளம் உண்டு. அதில் தலையை வைத்துப் படுத்துக்கொண்டான். சற்றுநேரத்தில் புகைவண்டி வரக்கூடியதாக இருந்தது. அவன் யாதொரு நினைவுமின்றி முருகன் திருவடியை நினைத்து சடக்கர மந்திரத்தைச் செபித்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்திற்குப் பின் சினிமா பார்த்துவிட்டு மனைவியுடன் சென்றுகொண்டிருந்த சிவானந்தஞ் செட்டியார் இதனைக் கவனித்தார். "யாரோ ஒரு மனிதன் தண்டவாளத்தில் தலைவைத்துப் படுத்திருக்கின்றான். அதோ இரயிலும் வருகின்றது. என்ன மடமை. தற்கொலைக்கு முயலுகின்றான் போலும்." என்று கருதினார். காரை நிறுத்தி விரைந்து சென்று அவன் முதுகில் ஒரு அடி கொடுத்து இழுத்துக்கொண்டு வந்தார்.

அவனைப்பார்த்து, "நீ யார்? இது என்ன வேலை? உன்னைப் போலீசில் ஒப்புவிப்பேன்" என்றார். அவன் கண்களில் நீர் ஆறாய்ப் பெருகியது.

"அண்ணா! நான் ஏழை. என் மனைவிக்கும் எனக்கும் உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லை. வறுமைப் பிணியால் வாடுகின்றேன். அயல்நாடு சென்று வேலை செய்து சம்பாதிக்கலாம் என்று எண்ணினேன். அதற்கும் பணமில்லை. பலரையடுத்தேன். எல்லோரும் கையை விரித்துவிட்டார்கள். என் வாழ்வு கசந்துவிட்டது. அதனால் என் மனம் மரணத்தை விரும்பியது" என்றான்.

சிவானந்தஞ் செட்டியார் அவனைக் கண்டு இரக்கமுற்றார். "அட பயித்தியமே! இதற்காகவா இறக்கத் துணிந்தனை. தற்கொலை கொடிய பாவமல்லவா? தற்கொலை புரிந்துகொண்டவர் பேயாக நின்று அலையவேணுமே. ஒரு யுகம்வரை மனிதப் பிறப்பு வராதே. இப்படி யெல்லாம் புத்தியைத் தளரவிடலாமா? கடவுள் கொடுத்த கைகால் இருக்கும்பொழுது கவலைப்படலாமா? துன்பம் வருகின்றபோது சிரிக்கவேண்டும்.



இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

என்கின்றார் திருவள்ளுவர். ஆதலால் நடப்பதெல்லாம் ஈசன் செயல். திருவருளாணைப்படி நல்வினை தீவினைக்கேற்ப நம்பால் இன்ப துன்ப மெய்தும் அவற்றைக் கண்டு அதிர்ச்சியடையக் கூடாது. இன்பம் வரும்போது மகிழக்கூடாது. அவ்வாறு மகிழாதவன் துன்பம் வரும்போது கவலமாட்டான்.

"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுத லிலன்"

ஆதலால் நீ கவலைப்படாதே. என்னுடன் காரில் ஏறு. உனது கவலையைக் கடவுள் மாற்றுவார்" என்று இனியவுரை கூறினார்.

சிவானந்தஞ் செட்டியாருடன் குணகரன் சென்றான். அவருடைய அன்புக்குப் பாத்திரமானான். அவன் கருத்தை யறிந்த சிவானந்தஞ் செட்டியார் பெரிதும் இரக்கமுற்றார். அவன் குடும்பத்திற்கு ஆகவேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். பம்பாயில் தனக்குத் தெரிந்த ஒருவருக்குக் கடிதந் தந்து, டிக்கட்டும் வாங்கித் தந்து,வழிச் செலவுக்குப் பொருளுந் தந்து அனுப்பினார்.

பெரிய உள்ளம்படைத்த அந்த உத்தமருடைய கருணை வெள்ளத்தில் முழுகிய குணகரன் ஆறுதலுற்று பம்பாயை நோக்கிப் புறப்பட்டான்.

கணவனைப் பிரிந்த ராஜலட்சுமி கொழுகொம்பிலாத தனிக் கொடிபோல் தள்ளாடி வாடித் தவித்தாள். கண்ணீர் ஆறாய்ப் பெருக்கினாள். உணவும் உறக்கமும் இன்றித் தவித்தாள். ஏங்கினாள். உடம்பு மெலிந்தாள். உள்ளம் பித்துப் பிடித்தது போல் அலமந்தாள். கல்லுங் கரையுமாறு கனிந்தாள். அவளுடைய துன்பத்தைக் கண்டு அருகில் உள்ள வீட்டிலுள்ளவர்கள் இரங்கினார்கள். அடுத்த வீட்டுப் பாட்டி வந்து அவளுக்கு ஆறுதல் கூறினாள். "அம்மா! இப்படி உண்ணாமலும் உறங்காமலும் இருந்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளலாமா? வெளியூர் சென்ற கணவன் மங்களமாகத் திரும்பி வரவேண்டும் என்று கடவுளைவேண்டிக்கொள். இப்படி அழுது கொண்டிருப்பது முறையன்று. பிரிவதும் கூடுவதும் இயல்பு தானே. பொருளை நாடி ஆடவர் அயலூர் செல்வது நம் நாட்டுத் தருமந்தானே. மனதைத் திடப்படுத்திக்கொள். தெய்வம் உனக்கும் உன் கணவனுக்கும் கருணைபுரியும். ஒரு குறைவும் வராது" என்று கூறித் தேற்றினாள்.

அன்பர்களை யழைத்தாள் ராஜலட்சுமி. அக்கம்பக்கமுள்ளவர்கள் வந்து கள்வனைப் பிடித்துக்கொண்டார்கள். தக்க சமயத்தில் கள்வனை எதிர்த்து அவன் முகத்தில் அக்கினித் திராவகம் விட்டு அவனை அகப்படவைத்த அவளுடைய கெட்டிக்காரத்தனத்திற்கு மகிழ்ந்தார்கள்.

“முருகன் எனக்கு அந்தவேளையில் அந்த அறிவைக் கொடுத்தான்; என்னுடைய கெட்டிக்காரத்தனத்தால் ஒன்றும் நடக்கவில்லை. நீங்கள் நல்லவேளையில் உபகரித்தீர்கள். அகாலத்தில் உங்கள் உறக்கத்திற்கு இடையூறு செய்ததற்கு மன்னிக்கவேணும்” என்றாள் ராஜலட்சுமி.

“அம்மா! நீங்கள் இப்படிச் சொல்லலாமா? கணவன் இன்றி தனித்திருக்கின்ற உனக்கு உதவிசெய்வது எங்கள் கடமையல்லவா? நாங்கள் எங்கள் கடமையைச் செய்தால் நன்றி கூறலாமா? தன் கைக்கு நன்றி சொல்வார் உண்டா? “என் கையே! ஒவ்வொரு வேளையும் எனக்கு உண்பதற்குத் துணை செய்த உனக்கு நன்றி” என்று யார் கூறுகின்றனர். தாயே! உன் பக்தி நெறியால் உலகம் உய்வு பெறுவதாக. வணக்கம். கதவைத் தாளிட்டுக்கொள்ளுங்கள். இந்தப் பாட்டி இங்கு துணைக்குப் படுத்துக்கட்டும்” என்று கூறி கள்வனைக் கொண்டு போய் போலீஸில் ஒப்புவித்தார்கள்.

இவ்வாறு மலைபோல் வந்த ஆபத்து பனிபோல் நீங்கியது. சில தினங்களுக்குப் பின் குணாகரன் வந்து சேர்ந்தான். பத்து பன்னிரண்டு பெட்டிகள், பழக் கூடைகள் முதலியவைகளுடன் வந்தான். ராஜலட்சுமி ஓடி கணவன் கால் மீது வீழ்ந்து விம்மியழுதாள்.

“கண்ணே! அழாதே. ஈசன் கருணையால் நான் சுகமே வந்து சேர்ந்தேன். வடிவேற் பெருமான் நமது வறுமையைத் தீர்த்துவிட்டார். இனி நமக்கும், நம்மை நாடிவருபவர்க்கும் பசி நோய் சாராது. எல்லாம் உன்னுடைய பூஜாபலன்தான். இந்தா. இவைகளை யெல்லாம் எடுத்து வை” என்று தான் கொணர்ந்த அரிய பொருள்களைத் தந்தான். அவைகளைக் கண்டு அவள் மகிழ்ந்தாளில்லை. கணவன் வரவே அவளுக்குப் பெருமகிழ்ச்சியைத் தந்தது. கணவனுக்கு இனிய உணவு அமைத்துப் படைத்தாள். பின்னர் கள்வன் வந்ததும், அக்கினித் திராவகம் விட்டு அவனை விரட்டி யடித்ததையும் கூறினாள். மனைவியின் மதி நலத்தைப் பாராட்டி மெச்சினான். இருவரும் ஒருமனமாக இன்புற்று வாழ்ந்தார்கள்.







உ
முருகா

# மனிதன்

மனிதன் என்ற சொல்லுக்கு நினைப்பவன் என்பது பொருள். நினைக்கும் கருவி மனம். மனத்தையுடையவன் மனிதன். தமிழில் மனிதன்; வடமொழியில் மநுஜா; ஆங்கிலத்தில் மேன். இவையெல்லாம் மன் என்ற பகுதியடியாகவே பிறந்தவை.

மனிதனாகப் பிறந்தவர் எல்லோரும் உண்மையில் மனிதனாகிவிட முடியாது. உணவைப்பற்றியோ, உறக்கத்தைப் பற்றியோ, வேறு மற்ற உலகப் பொருள்களைப்பற்றியோ நினைப்பவன் மனிதனாகமாட்டான். உண்பது உறங்குவது மக்களைப் பெறுவது உலாவுவது முதலிய யாவும் விலங்குகளுக்கும் நமக்கும் பொது. விலங்குகளும் நிரம்ப உண்கின்றன. நாமும் உண்கின்றோம். விலங்குகளும் மக்களைப் பெறுகின்றன, நாமும் பெறுகின்றோம். ஆகவே மனிதர்களாகிய நாம் எந்தவகையில் விலங்குகளைவிட மேலானவர்கள்? என்ற கேள்வி எழுகின்றது.

"நான் யார்? என் உள்ளமார்? நான் எங்கிருந்து வந்தேன்? எதற்காகப் பிறந்தேன்? இந்த உடம்பு தானே வந்ததா? ஒருவன் தந்து வந்ததா? தந்தவன் தன்பொருட்டுத் தந்தானா? என் பொருட்டுத் தந்தானா? நான் எங்கே போகவேணும்? இந்த உடம்பைத் தந்த ஒருவன் தன்மை யாது? அவனை யடையும் வழி யாது? அடைந்தவர்கள் யார்? என்பனவாதி வினாக்களை உள்ளுக்குள் கேட்டுக்கொண்டு, அவைகளைப்பற்றி ஆழமாக நினைத்து, தகுந்த விடைகளை யறிந்து அறவொழுக்கத்தில் நிற்பவன்தான் உண்மை மனிதன். இல்லையேல் மனிதவுடம்பெடுத்த விலங்குகள்தான்.

ஒரு மாவட்டத்திற்கும் மற்றொரு மாவட்டத்திற்கும் என்ன வேற்றுமை? நடுவில் ஒரு எல்லைக்கல் இருந்து இரண்டு மாவட்டத்தையும் பிரிக்கின்றது. அதுபோல் மனிதனுக்கும் விலங்குக்கும் இடையில் இட்ட எல்லைக் கல் கடவுள் நினைவு. கடவுள் உணர்வு இல்லையானால் அவன் எத்துணை அறிஞனாயினும் விலங்கே.

கண்ணுவா ரேனுமுனைக் கைதொழாராயின் அந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே.

என்கின்றார் தாயுமானார்.

திருவொற்றியூரிலே நெல்லிக்கா பண்டாரத் தெருவில் ஒரு மகான் இருந்தார். மாலையிலே ஒற்றித் தியாகப் பெருமானை வணங்கும்பொருட்டு மக்கள் போகும்போது அம் மகான், "குதிரை போகின்றது", "எருமை போகின்றது", "நாய்போகின்றது", "ஆடு போகின்றது", "புலிபோகின்றது", "நரி போகின்றது", "பூனை போகின்றது", "பெருச்சாளி



போகின்றது" என்று கூறுவாராம். இராமலிங்க அடிகளார் போனால் மட்டும் "மனிதன் போகின்றான்" என்பாராம். ஆகவே மனிதப் பண்புடையவனே உண்மை மனிதன்.

மேலை நாட்டில் ஒரு ஆன்றோர் பகலில் விளக்கை யேந்திக் கொண்டு தெருவில் போகின்றவரை அவ்விளக்கைக் கொண்டு உற்று உற்றுப் பார்த்துத் திரிந்தாராம். வீதியில் போகின்றவர்கள் இவருக்கென்ன பயித்தியமா? பட்டப்பகலில் விளக்கை ஏந்திக்கொண்டு போகின்றவனையும் வருகின்றவனையும் உற்று உற்றுப் பார்க்கின்றாரே? இதன் கருத்து என்ன? என்று கூறிப் பரிகசித்தனர்; சிலர் சிரித்தனர். சிலர் இகழ்ந்தனர். சிலர் "ஓய் இது என்ன வேலை?" என்று வினாவினார்கள்.

"ஐயா! வேறு ஒன்றுமில்லை. மனிதர் யாராவது இருக்கின்றாரா? என்று ஆராய்ந்து பார்க்கின்றேன்" என்றார். ஆகவே எல்லோரையும் மனிதராக அவர் கருதவில்லை.

அப்பரடிகளும் உலகத்தை நோக்கி

மனிதர்காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈச னெனுங்கனி
இனிது சாலவு மேசற் றவர்கட்கே.

என்று பாடி மனிதர்களை யழைக்கின்றார்.

ஆகவே நாம் மனிதர்களாக ஆகவேண்டும். பொன்னையும் பொருளையும் வீட்டையும் மாட்டையும் நிலபுலங்களையும் பட்டத்தையும் பதவியையுமே நினைத்து நினைத்து நெஞ்சு புண்ணாகி மடிந்துவிடக் கூடாது.

முதலில் குறிப்பிட்ட நேரங்களில் இறைவனை நினைக்க வேண்டும். பின்னர் நாள் செல்லச் செல்ல நல்ல சாதனையால் இடையறாது இறைவனை நினைக்க வேண்டும்.

"இறைவனே! உன்னை மறந்தால் இறந்து போவேன்" என்கின்றார் அப்பர். இறைவன் நினைப்பவர்களுடைய உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளுவான்.

ஒரு மந்திரி அல்லது வைஸ்ராய் ஒரு கலக்டர் நம்முடைய வீட்டிற்கு வந்து சில நிமிஷம் இருந்து சென்றால் அதனைப் பெருமையாக நினைக்கின்றோம். இறைவன் நமது உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு உறைவானாயின் அதைவிடப் பெருமை வேறு ஒன்று இருக்கமுடியுமா? நன்கு சிந்தியுங்கள்.

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனே.

உ

முருகா

# வருணாசிரம தருமம்

[அன்பன் மு. பெருமாள்]

௨௪-ம் பக்கத் தொடர்ச்சி)

இவர்களது உரையாடுதலை ஊக்கமாகக் கவனித்து உறங்காது கேட்டுக் கொண்டிருந்தனர் குமாரசாமியும், அவரது மனைவியும். நம்குலந்தான் உயர்ந்தது என எண்ணிக் கொண்டிருந்தோமே! இந்த பெரியவர் மக்கள் யாவரும் ஒரே குலத்தையுடையவர் என்று விளக்கமாக விவரித்துவிட்டாரே! என்று ஆழ்ந்து சிந்தித்து உறங்காமல் பேசிக்கொண்டிருந்தனர். இதுவும் நமக்கொரு நல்லுபதேசந்தான் என மகிழ்ந்தனர்.

காலை மணி ஆறு ஆகிவிட்டது. கதிரவனுதயம் கிழக்கில் தோன்றியது. தம்பதிகள் இருவரும் எழுந்து ஊருக்குத் திரும்ப வண்டி வசதிகளைத் தேட முற்பட்டனர். கூட்டம் அதிகம். வண்டிவசதிகள் வாய்க்கவில்லை. கால் நடையாகச் செல்லலாயினர். நான்கு மைல்கள் நடந்தனர். காலையிலும் உணவு கிடைக்கவில்லை. பட்டினியால் வருந்தலாயினர். சிறிது தூரத்தில் உள்ள சிறு கிராமத்தை யடைந்தனர். சிற்றுண்டி விடுதி ஒன்றை அங்குக் கண்டு உள்ளே ஆவலாக நுழைந்தனர் குமாரசாமியும் அவர் மனைவியும். இட்டிலியும், சட்டினியும் கொணரச் செய்து உண்ணலாயினர். அவர்களுக்குப் பின்னாலிருந்த ஒருவர், மாமா! ஒரு தோசை சீக்கிரம் கொண்டுவாருங்கள்; 9 மணி பஸ் வரும் நேரமாச்சு; என்று இரைந்து விரைந்து கேட்டார்.

குமாரசாமி அக்குரல் பழகிய குரல் மாதிரி அதுவும் நம் ஊர் ராமசாமி கவுண்டர் குரல் போலிருக்கின்றதே என்று திரும்பிப் பார்த்தார். ஆம் அதே இராமசாமி கவுண்டர்தான்! இருவரும் பார்த்துவிட்டனர்! எப்போது வந்தீர்கள் முதலியார் அவாள்! என்று இராமசாமி கேட்டார்? காலையில்தான் வள்ளி மலையிலிருந்து பஸ் கிடைக்காமையால் கால் நடையாக இங்கு வந்தோம். தாங்கள் எங்கே இவ்வளவு தொலைவில் வந்தீர்கள் என்றார் குமாரசாமி.

இந்த ஓட்டல் வைத்திருப்பவர் எனது தாய் மாமன். பிழைப்பின் காரணமாக வெகு நாட்களுக்கு முன்னரே இந்த

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

அவனைத் தூய சிந்தையுடன் நினைக்கவேண்டும். "ஆபாதனேனும் நாளும் நினைவது பெறவேணும்" என்று வரங் கேட்கின்றார் அருணகிரிநாதர். ஆகவே மனிதர்களாகிய நாம் நினைக்கவேண்டிய பொருளாகிய நிமலனை இடையறாது நினைத்துப் பிறவிப் பயனைப் பெறுவோமாக.



ஊருக்கு வந்துவிட்டார். வெகு தூரத்திலுள்ள இந்த ஊருக்கு வந்து இவரைக் காணவேண்டுமென பல வருடங்களாக முயற்சித்தேன். இங்கு இரண்டு நாளைக்கு முன்தான் வரமுடிந்தது. இப்பொழுது ஊருக்குத் திரும்புகிறேன். தங்கள் யாத்திரை முடிந்துவிட்டதா? நம் ஊருக்கு எப்போது வருவீர்கள்? என்று கேட்டார் இராமசாமி.

(என்ன மானக்கேடு! கவுண்டர் ஓட்டல் என்று தெரியாமல் போய்விட்டதே! பசிவேளையில் எதையுங் கருதாமல் விசாரியாமல் உள் நுழைந்துவிட்டோமே! இந்த நேரம் பார்த்துதானா இந்த நம் ஊர் கவுண்டர் இங்கு வரவேண்டும்! அன்று அவர் இல்லத்தில் ஆசாரம் பேசி மறுத்த நாம் இன்று அவர் மரபினரிடமே உண்ணும்போது கையும் மெய்யுமாக கண்ணெதிரே சிக்கிக் கொண்டோமே! என்று தன்னுள் மிகவும் நொந்து கொண்டவனாய்) எங்கள் யாத்திரை முடிந்த மாதிரிதான். திருத்தணிகையைத் தரிசனம் செய்துவிட்டு காஞ்சியைக் கண்டுகளித்துக்கொண்டதும் நேராக ஊருக்குத் திரும்பி வருவோம் என்றான் குமாரசாமி.

நாங்கள் யாத்திரை வந்த பிறகு எங்கள் குல ஆசாரம் என்பதையெல்லாம் விட்டுவிட்டோம். வள்ளிமலையில் ஒரு சுவாமியார் நாம் யாவரும் ஒரே குலம் என்று தெளிவாக தெளிவுபடுத்திவிட்டார். எனவே எல்லோரையும் சமமாகப் பாவித்துவிட்டோம். ஆதலால்தான் இங்கு சிற்றுண்டி சாப்பிட்டோம் என்று குமாரசாமியின் மனைவி இராமசாமியைப் பார்த்துக் கூறி நிலைமையைச் சமாளித்துக்கொண்டாள்.

இதைக் கேட்ட இராமசாமி நகைத்துக்கொண்டே மிக்க மகிழ்ச்சியம்மா! தங்கள் போன்றவர்கள் காலமாறுதலைக் கருத்தில் கொண்டு மனதை மாற்றிக்கொள்வது மிகவும் போற்றத்தக்கதாகும்.

காலம் மாறுவதாவது? அது எப்பொழுதும்போல்தான் இயங்குகின்றது. மக்களாகிய நாம்தான் மாறுதலடைகின்றோம். என்றாள் குமாரசாமியின் மனைவி.

நீங்கள் உரைப்பது உண்மைதான் விரைவில் சுகமாக ஊர்வந்து சேருங்கள் என்று கூறி அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு சென்றான் இராமசாமி.

இருவரும் தங்களுக்குற்ற அவமானத்தை எண்ணி வருந்தியவராய் திருத்தணிகையை நோக்கிச் சென்றனர். இடையில் சோழலிங்கபுரம் என்ற ஊரில் இரவில் தங்க நேர்ந்தது. அதுசமயம் ஒரு பாகவதர் பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருந்தார். இருவரும் சென்று இருந்து கேட்டனர்.

அன்பர்களே! வருணாசிரம தருமம் என்றால் என்ன என்பதை நீங்கள் யாவரும் நன்றாகச் சிந்தித்து நினைவில்

கொண்டால் இன்று மாலை உங்கள் ஊரில் நடந்த சாதிச் சண்டை நேர்ந்திருக்காது. அடிபட்டு சிலர் ஆஸ்பத்திரிக்குப் போகவும் நேர்ந்திராது. வீணுக சாதிப் பிரிவினையை வளர்த்து, வம்பிட்டு வருந்துவது மூடத்தனமாகும். நாம் யாவரும் ஆண்டவனது குழந்தைகள். ஆகவே மக்களாகிய நாம் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உண்மையை உணர வேண்டும்.

ஓதுதல், காத்தல், வாணிப மாற்றல், கடமையைச் செய்தல். ஆக இந்நான்குந்தான் வருணுசிரம தருமமென வகுத்தனர் ஆன்றோர். பகவத்கீதை பகர்வதும் இதுவே. ஆக இந்நான்கும் உலக மக்கள் வாழ்க்கைக்கு அத்யாவசியமான பொதுக் கடமைகளாகும். இக்கடமைகள் எவருக்கும் தனியுரிமை யுடையதல்ல. அவரவர்கள் பெற்றோர்கள் புரிந்து வரும் கடமைகளை அவரவர்கள் பின்பற்றுவதுதான் சிறந்த கடமையும் செந்நெறியுமாகும்.

ஸ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வநுஷ்டிதாத்
ஸ்வதர்மே நிதநம் ஸ்ரேய: பரதர்மோ பயாவஹ:

"நன்ருகச் செய்யப்படும் பிறருடைய தருமத்தினும், குணமற்றதாயினும் தன்னுடைய சுய தருமமே மேலானது. தன்னுடைய தருமத்திலே சாதலும் நன்று. பிறருடைய தருமம் அச்சமே தரும்,"

என்று கண்ணபிரான் கீதையில் உபதேசம் செய்துள்ளார். ஆகவே ஆன்மாக்களாகிய நாம் முன்னே செய்துள்ள இருவினைக்கு ஏற்ப உடல் என்ற இந்த சட்டையைத் தாங்குகின்றோம். பிறந்தபின் பெற்றோர்கள் வழிநின்று அவர்களாற்றிய கருமங்களைப் பின்பற்றி ஆற்றிவருதல்தான் அறப்பண்பாகும். அக் கருமங்களை ஆற்றுவதால் தாழ்வென்பதில்லை. அது ஒரு குலமுமாகாது. அவரவர்க்கு வினைக்கு ஏற்ப வாய்த்த கடமைதானே ஒழிய தனிப்பிரிவான குலமொன்று மில்லை.

மற்ரெரு முக்கியமான உண்மையை உணர்ந்தால் நாம் குலமயக்கிலிருந்து விடுபடுவோம். உதாரணமாக ஒவ்வொருவர் ஆன்மாவும் மூன்று குணங்களாலே கட்டுண்டதாகும். அதற்குப் புறம்பாக எந்த ஆன்மாவும் இயங்க இயலாது. அதாவது – தாமஸம் - ராஜஸம் - சாத்வீகம் (அதமம், மத்திமம் உத்தமம்.) ஆக இம் மூன்று குணங்களும் மனிதனது மனத்தை அறிவை வண்டியின் சக்கரம் போன்று பற்றிச் சுழற்றிய வண்ணமாகவே இருக்கும். எந்த குணம் ஆட்சியில் வருகின்றதோ மனிதன் அந்த நிலை அடைகின்ருன். அவ்வேளையில் அவனது எண்ணம், பேச்சு, செயல் அந்த வடிவந் தாங்கி விளங்கும். எனவே இதன்படி ஒரு மனிதன் ஒவ்வொரு

உ

சிவமயம்

# தோத்திரம்

சிவபெருமானுர்க்குச் செய்யப்படும் உபசாரங்களெல்லாவற்றுள்ளும் அவரால் அதிகமாக விரும்பப்படுவது அவரைத் தோத்திரம் செய்தலாகிய உபசாரம் ஒன்றேயாம். இதுபற்றியே வேதாகமங்கள் அவரைச் "சாமவேதப் பிரியன்" என்று கூறும். தமிழ் வேதமும் அவரைக் "கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப் - பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி" எனவும், "பண்ணொன்ற விசைபாடு மடியார்கள் குடியர்க—மண்ணின்றி விண்கொடுக்கு மணிகண்டன்' எனவும், "வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டரினத்தகத்தான்" எனவும் முழங்குகின்றது. அன்றியும், திருத்தொண்டத்தொகையில் 'பரமனையே பாடுவாரடியார்க்கு மடியேன்' என்று பாடற்ரெண்டு செய்வாரைத் தனியாயெடுத்துப் போற்றுகின்றது. பின்னும், கைலைமால்வரையைப் பெயர்க்க முயன்று தம் காற் பெருவிரலால் நசுக்குண்டு வருந்திக் கிடந்த இராவணனுக்கும் அவன் பாடிய கீதத்தின் வசப்பட்டு இறைவர் அருள் செய்த பிரபாவத்தைத் தமிழ் வேதம் போற்ருத இடமில்லை. அல்லாமலும்,

விளக்கினர் பெற்ற இன்பம் மெழுக்கினுல் பதிற்றி யாகும்
துளக்கில்நன் மலர்தொடுத்தால் தூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னுர்க் கடிகள்தாம் அருளு மாறே.

---

நாளும் பிறருக்குத் தீமை செய்கையில் "சண்டாளனுகவும்", பிறருக்குத் தொண்டாற்றி உதவும்போது "வைசியனுகவும்", பிறருக்கு ஆபத்து வந்தபோது பாதுகாப்பளிக்கும்போது "க்ஷத்திரியனுகவும்", பிறாது அறிவை விளக்கம் பெற ஓதுவித்து அன்பும், அறனும், அடக்கமும், ஆண்டவன் வழிபாடும் உடையவராகத் தானொழுகிப் பிறரையும் அவ்வழியில் செலுத்துகையில் "அந்தணனுகவும்" ஆகின்ருன். இந்த நான்கு வருணுசிரமத் தருமங்களும் எல்லோரிடமும் பொதுவாக விளங்கும் நியதியுடையது. அவனவன் வினைக்கேற்ப ஏற்றத் தாழ்வாகப் பெற்று நல்லோனுகவும், தீயோனுகவும் வாழ்வான். ஆகவே வருணுசிரம தருமம் என்பது சாதியல்ல. குணமும் கடமையுந்தான் என்பதை நாம்ஒவ்வொருவரும் உணர்ந்து, நாம் யாவரும் ஆண்டவன் குழந்தைகள் என்று கருதி அன்போடு பழகி வாழ்வோமாக. என்று கூறி காலட்சேபத்தை முடித்தார். இதைக் கேட்ட குமாரசாமியும், அவர் மனைவியும் ஐயம் நீங்கி மகிழ்வுடன் ஊருக்குத் திரும்பி எல்லோருடனும் இனிது கலந்து பழகி வாழ்ந்தனர். மற்றவர்களும் இவர்களது மனமாற்றத்தைக் கண்டு மகிழ்ந்து போற்றினர்.

என்னுந் திருநேரிசையால் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருப்பள்ளித்தாமந் தொடுத்தல், திருவிளக்கேற்றல் என்னும் தொண்டுகள் ஒவ்வொன்றுக்கும் உண்டாம் பலன்களை வரையறுத்துக் கூறி, பாடற்றெண்டினுலுண்டாகும் பலன் வரையறுக்கப்படாதது என்பதை வற்புறுத்துகின்றது.

குமரகுருபர சுவாமிகளும் தாம் அருளிச்செய்த திருவாரூர் நான்மணி மாலையில்,

தண்மலரும் பொழிற் றென்கம லேசர்க்குச் சாத்துகின்ற
வொண்மலர் சொன்மலர்க் கொவ்வாது போலுமற் றோர்புலவன்
பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால்சிவந்த
கண்மலர் சாத்தியுங் காண்பரி தான கழன்மலரே.

என்னும் செய்யுளில், "திருமால் தமது கண்ணுகிய மலரைப் பறித்து அருச்சித்தும் காணவரிதாய் நின்ற சிவபெருமானுடைய கழற்கான் மலரை, சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாமாலை சாத்திப் பரவை நாச்சியாரிடம் தூதுபோம்படி செய்துகொண்டனர். ஆதலால், சிவபெருமானுர்க்குப் பூமாலையினும் பாமாலையில் விருப்பம் அதிகம்" என்று திருட்டாந்த பூர்வமாக விளக்கியருளினர். மேலும் மாணிக்கவாசகப்பிரான் மதுரவாசகத்திற்காசைப்பட்டு, இறைவனுர் மண் சுமந்து அடியும் பட்டதன்றி அவர் செய்த தோத்திரங்களை ஏடும் எழுத்தாணியுங் கொண்டு எழுதிவைத்துக்கொண்டனர். இவற்ருல் சிவபெருமான் தோத்திரப்பிரியர் என்பதும் அவருக்குச் செய்யப்படும் உபசாரங்களெல்லாவற்றுள்ளும் மிகச் சிறந்தது தோத்திரமேயாமென்பதும் விளங்கும்.

சிவபெருமான் தோத்திரப்பிரியராயின் அவர் சில இழிந்த மாந்தர்களைப் போல் புகழ்ச்சி விருப்பர் எனவும் விருப்பு வெறுப்பும் இன்ப துன்பங்களும் உடையவரெனவும் கொள்ள வேண்டி வருமே எனின், வராது. அவரைத் தோத்திரப் பிரியர் என்றும் விருப்பு வெறுப்பில்லாதவர் என்றும் கூறும் நூல்களே ஒன்ருேடொன்று மாறுபடக் கூறுகின்றன. நூல்கள் அவ்வாறு கூறுவது ஒன்ருேடொன்று மாறுபடக் கூறுவதாகாதோவெனில், ஆகாது. ஏனெனில் சிவபெருமானுக்கு இயற்கையாகவே உள்ள நிலைகள் இரண்டு. அவை சொரூபமும் தடத்தமுமாம். இவற்றுள் சொரூப நிலையை நோக்க அவர் குணம் குறி செயல் முதலியன ஒன்றும் இல்லாத சச்சிதானந்தப் பரம்பொருள் என்று சொல்லப்படுவர். தடத்த நிலையை நோக்க அவர் பல நாமங்களும் வடிவங்களும் குணங்களும் செயல்களும் உடையவர் என்று சொல்லப்படுவர். இவ்விரண்டு நிலைகளுள் சொரூபநிலையே அவரது உண்மை நிலை.

(தொடரும்)

உ
ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 21 — துன்முகி ஆண்டு ஆனித் திங்கள் ஜூன்-1956 — இதழ் 3

## திருப்புகழ்

### திருச்செந்தூர்

சங்குபோல் மென்கழுத் தந்தவாய் தந்தபற்
சந்தமோ கின்பமுத் தெனவானில்
தங்குகார் பைங்குழற் கொங்கைநீள் தண்பொருப்
பென்றுதாழ் வொன்றறுந் துலகோரைத்
துங்கவேள்செங்கைபொற்கொணடல்நீயென்றுசோற்
கொண்டுதாய் நின்றுரைத் துழலாதே
துன்பநோய் சிந்தநற் கந்தவே ளென்றுனைத்
தொண்டினு லொன்றுரைக் கருள்வாயே
வெங்கண்வ்யாளங்கொதித் தெங்குப்வேமென்றெடுத்
துண்டுமே லண்டருக் கமுதாக
விண்டநா கன்திருக் கொண்டல்பா கன்செருக்
குண்டு பேரம்பலத் தினிலாடி
செங்கண்மால் பங்கயக் கண்பெறு தந்தரத்
தின்கணு டுந்திறற் கதிராழித்
திங்கள்வா ழுஞ்சடைத் தம்பிரா னன்புறச்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

## பதவுரை

வெம்கண் வ்யாளம் - வெப்பமான கண்களையுடைய பாம்பினின்றும் வந்த ஆலகால விடத்தை, கொதித்து எங்கும் வேம் என்று எடுத்து உண்டு - எங்கும் சூடாகி வேகச் செய்யும் என்று கருதி அதனை எடுத்து உண்டு, மேல் அண்டருக்கு அமுது ஆக - மேன்மையுடைய தேவர்கட்கு அமிர்தம் ஆகுமாறு, விண்டநாதன் - வெளிவரச் செய்த தலைவரும், திருக் கொண்டல் பாகன் - அழகிய மேகவண்ணராகிய திருமாலைத் தமது வலப்பாகத்தில் கொண்டவரும், செருக்கு உண்டு பேரம்பலத்தினில் ஆடி - மகிழ்ச்சியுடன் பெரிய வெளியினில் திருநடனம் புரிபவரும், செம் கண்மால் - சிவந்த கண்களையுடைய திருமால், பங்கயக் கண் பெறுது - தாமரை போன்ற கண்களால் காணமுடியாத நிலையில், அந்தரத்தின்கண் ஆடும்திறல்-அருள்வெட்ட வெளியில் ஆடும் பேராற்றல் படைத்தவரும், கதிர் ஆழி திங்கள் வாழும் சடை தம்பிரான் அன்பு உற - ஒளிபெற்ற கடலில் பிறந்த சந்திரன் உறையும் சடையை உடைய தனிப்பெருந் தலைவரும் ஆகிய சிவபெருமான் அன்புகொள்ள, செந்தில்வாழ் செந்தமிழ் - திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள செந்தமிழ்க்கே உரிய, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! சங்குபோல் மென்கழுத்து - மெல்லிய கழுத்து சங்கு போன்றது என்றும், அந்த வாய் தந்த பல் - அழகிய வாயில் உள்ள பற்கள், சந்த மோக இன்ப முத்து என - இனிய மோகத்தைத் தரும் முத்துக்கள் என்றும், வானில் தங்கு கார் பை குழல் என்றும் - விண்ணில் தங்குகின்ற கரிய பசிய மேகம் போன்றது கூந்தல் என்றும், கொங்கை-தனமானது, நீள் தண்பொருப்பு என்றும்-நீண்ட குளிர்ந்த மலை போன்றது என்றும் கூறி, தாழ் வொன்று அறுத்து - தாழ்வு என்பதை விடுத்து, உலகோரை-உலகிலேயுள்ள செல்வரைப் பார்த்து, துங்கவேள் - அழகில் உயர்ந்த மன்மதனே! செங்கை பொன் கொண்டல் நீ என்று - சிவந்த கரத்தால் பொன்தருவதில் நீ மேகமேயாகும் என்று புகழ்ந்து, சொல் கொண்டு – தமிழ்ச் சொற்களைக் கொண்டு, தாய் நின்று உரைத்து உழலாதே - அவர்கள்பால் தாவிச் சென்று நின்று கவிபாடி இங்கும் அங்குமாக உழன்று திரியாமல், துன்பநோய் சிந்த-பிறவித் துன்பநோய் அழியுமாறு, நல் கந்தவேள் என்று உனைத் தொண்டினால் - நல்ல கந்தக் கடவுளே என்று உம்மைத் துதித்து தொண்டு நெறியில், ஒன்று உரைக்க அருள்வாயே - ஒன்று கூற அருள்புரிவீர்.

## பொழிப்புரை

வெவ்விய கண்களையுடைய பாம்பினிடம் தோன்றிய ஆலகால விடத்தை எங்கும் கொளுத்தி யழிக்கும் என்று கருதி எடுத்து உண்டு. மேன்மை பெற்ற அமரர்களுக்கு அமுதம் ஆகுமாறு வெளிப்படுத்தியருளிய நாதரும், அழகிய திருமாலைத் தமது வலப்பாகத்தில் கொண்டவரும், ஆனந்தத்துடன் பேரம்பலத்தில் நடனம் புரிபவரும், சிவந்த கண்களையுடைய நாராயணர் கண்கொண்டு காணக் கூடாத நிலையில் அருள் வெளியில் ஆடுகின்ற சமர்த்தரும, கடலில் தோன்றிய ஒளிபெற்ற சந்திரன உறைகின்ற சடை முடியையுடையவரும் ஆகிய தனிப்பெருந் தலைவர் சிவபெருமான விரும்புகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள செந்தமிழ்க் கடவுளாகிய பெருமிதம் உடையவரே! மெல்லிய கழுத்து சஙகுபோனறது, அழகிய வாயிலுள்ள பல் இனிய மோகத்தைத்தரும் முத்துப் போன்றது, பசிய கூந்தல் வானில் தங்கும கரிய மேகம, தனங்கள் நீண்டு குளிர்ந்துள்ள மலைகள் என்று வியந்து கூறி குறைவு என்பதை நீக்கி; செல்வரை நாடிச் சென்று மன்மதனே! உன் கை மேகம் போன்றது என்று புகழுரை கூறி அவரிடம் தாவி நின்றுபாடி (வீணில) அழியாமல் பிறவித் துன்பமாகிய நோய் விலக நலம் பொருந்திய கந்தவேளே என்று உம்மைத் துதித்து தொண்டு புரிந்து ஒருமொழியாகிய தனிமந்திரத்தைச் செபிக்கத் திருவருள்புரிவீர்.

## விரிவுரை

விடபுருடர்கள் அழிந்துபோகும் மாதர் அவயவங்களை அழகின் கருவூலமாகக் கருதி அவைகட்கு உவமைகள் தேடி நாடி பாடி அவமே மழிவர். காலையிலே கவின்பெற இலகும் மலர் மாலையிலே வாடியுதிர்வதும், செசெவ என்று மின்னி பட்டுத் துணிபோல் விளங்கும் மாந்தளிர், பின்னர் முதிர்ந்து உலர்ந்து உதிர்ந்து காலில் மிதிபட்டு அழிவதும் கண் கூடு. பவுர்ணமியன்று அழகாகத் தோன்றிய முழுநிலா தேய்ந்து போவதும், முத்துபோல் இருந்த நீர்த்துளிகள் சிறிதுநேரத்தில் வற்றியுலர்ந்து போவதையும் பார்க்கின்றோம். ஆகவே இந்த அழகு அனைத்தும் நிலையில்லாதவை. நிலைபேறுள அழகு இறைவனிடமே அமைந்திருக்கின்றது. ஆயிரங்கோடி மனமதர்களுடைய அழகுகள் அனைத்தும் ஒன்று கூடினாலும் முருகவேள் தூயதிருவடியின் ஒருபுறத்தில் உள்ள அழகுக்கு இணைவராது என்று நேரிற கண்ட சூரபன்மன் கூறுகின்றான்.

ஆயிர கோடி காமர் அழகெலாந் திரண்டொன்றாகி
மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந்தன்னில்
தூயநல் எழிலுக் காற்ற தென்றிடில் இனைய தொல்லோன்
மாயிரு வடிவுக் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.

ஆகவே இத்தகைய அழகின் பிறப்பிடமும் அழகின்சொரூபமும் ஆகிய அழகனைக் கண்டு களிக்காமலும அவனைக் கைகூப்பித் தொழாமலும், அவனைச் சிந்திக்காமலும் மனிதர் அழகில்லாத மலக் கூட்டை - மலஞ் சோரும ஒனபது வாயிற் குடிலை – நாறுகின்ற தசைப்பொதியைக் கண்டு அதுவே அழகின இருப்பிடமென்று, விளக்கில விழும் விட்டிற்பூச்சியைப்போலே, மலத்தை

**எடுத்துண்டு:—**

இறைவன் அமரரை யாட்கொள்ளும் பொருட்டு ஆலகால விடத்தை யெடுத்து உண்டு அமரர்க்கு அமுதத்தை வர வழைத்து அளித்து அருளபுரிந்தனர். இல்லையேல் வானவர் யாவரும அன்றே மாண்டிருப்பார்கள்.

மாலெங்கே வேதனுயர் வாழ்வெங்கே இந்திரன்செங்
கோலெங்கே வானோர் குடியெங்கே—கோலஞ்செய்
அண்டங்கள எங்கே அவனியெஙகே எந்தைபிரான்
கண்டமங்கே நீலமுறாக் கால.

என்று பாடுகின்றார வடலூர் வள்ளலார்.

இறைவனுடைய எல்லையில்லாத பெருங் கருணையை விளககுவது அவருடைய நீலகணடம.

**திருக்கொண்டல்பாகன்:—**

உமையம்மையாரை இடப்பாகத்தும் திருமாலை வலப் பாகத்தும சிவபெருமான் வைத்திருபபர். திருமால் புருஷ சக்தி யென அறிக. கூர்ம புராணம் முதலிய நூல்களில் விளக்கமாக இது பற்றிக் கூறியுளது. இத்திருமால் சம்புபட்சத் தில் உள்ள நவந்தருபேதத்தில் உளள மூர்த்தியென வுணர்க.

இறந்து பிறந்து உழலும் மூவரில் ஒருவராகிய திருமால் என மயங்கறக. அடிமலா தேடியறியாது அல்லலுற்ற திருமால் அணுபட்சத்தில் உளளவர் எனவும் அறிக. இந்த விளக்கத்தை வெருபேர் அறியாது இரணடும் ஒனறென எண்ணி இடர்ப் படுவர்.

"பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து"

என்று ஆழ்வாருங் கூறுகின்றார். இதுதான் சிவமூர்த்தம் இருபத்தைந்தில் கேசவார்த்தமூர்த்தம என உணர்க.

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—வீழும்
திரண்டருவி பாயும திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து.

என்பதும ஆழ்வார் வாக்கு.

**செருககுண்டு பேரம்பலத்தினிலாடும்:—**

செருக்கு—மகிழ்ச்சி. இறைவனுடைய நடனம் ஆனந்த நடனம.

சிற்றம்பலம் — ஆன்மாக்களின் இதய தாமரையிலுள்ள சிறுமையான நுட்பமான தகராகாசம் ஆகும.

பேரம்பலம் உலகங் கடந்த பெருவெளியாகும்,

உ
முருகா

## சொல்லால் வருங் குற்றம்.

நாம் ஆறுதலாகவும் மனம் சாந்தியுடனும் வாழவேண்டு மானல் நமது சமய உண்மைகளை நன்கு அறிந்துகொள்ள வேண்டும். அநேகர் கடலைப்பற்றியும, அணுவைப்பற்றியும், காற்றைப்பற்றியும், செடி கொடிகளைப்பற்றியும் ஆராய்ந்து அறிந்துகொளளுகின்றார்கள். நமது சமய நுட்பதிட்பங்களை ஆராயவதில்லை; அறிவதில்லை; அந்தோ! பரிதாபம்.

அவைகளை யறிந்தால் எத்தனை சாந்திவரும். அமைதி வரும். ஆனந்தம வரும்.

ஒருவன் நம்மை அகாரணமாக வைதாலும், நாம் வைத வன் மீது கோபிக்கக்கூடாது வருத்தபபடக்கூடாது. அனறி யும் நம்மை ஒருவன் அகாரணமாக அபாண்டம் சொல்லுவா ஞனல் நமது வினைகளைக் கொஞ்சம் பங்கிட்டுக்கொள்வான்.

---

(முன்பக்கத தொடர்ச்சி)

**செங்கண்மால் பங்கயக் கண்பெறுது:—**

புண்டரீகக் கண்ணுடைய திருமால் ஆயிரம் ஆண்டு தேடி யும் அரனர் அடிமலர் காணப் பெற்றாரில்லை.

"மண்வைத்த குக்கி மணிவண்ணன்—அன்றொருநாள்
கண்வைத்துங் காணுக் கழலிணையான்"

என்ற அமுதவாக்காலும் அறிக.

**அந்தரத்தின் கண் ஆகும்:—**

இங்கே அந்தரம் என்பது பகிரண்ட வெளியை யுணர்த்தி யது. ஆண்டவனுடைய அசைவே அகிலவுலகங்களின் அசைவுக்குங் காரணமாகும்.

**செந்தில்வாழ் செந்தமிழ்ப பெருமாளே:—**

சிவபெருமானும் அன்பு கொள்ளும் திருத்தலமாகிய திருச்சிரலைவாய் என்னும் திருச்செந்தூரில் தமிழில் தவழ்ந்து வரும் தென்றல் காற்றுடன் செந்தமிழ்த்தெய்வமாகத் திருவே லிறைவன் வீற்றிருக்கின்றான்.

**கருத்துரை**

சிவபெருமான் மகிழும் செந்தில் மேய திருமுருக வேளே! அவலர்களைப் பாடாமல் உம்மையே பாடி ஒரு மொழி புகன்றுய்ய அருளுவீர்.

பெரியவர்களை நிந்திப்பவன் அவர்கள் வினையைக் கொள்முதல் செய்கின்ருன். இந்த உண்மையை யறிந்தவன் தன்னைப் பிறர் நிந்திக்கின்றபோது அணுத்துணையும் கலக்கமின்றி சாந்தியுடன் இருப்பான்.

ஆகவே நாம் யாரையும் எதையும் யோசிக்காமல் நரம்பில்லாத நாவினுல் நிந்தனை புரியக்கூடாது.

சொல்லாலே எத்தனையோ குற்றங்கள் புரிகின்ரேம். பட்டினத்து சுவாமிகள் இறைவனை நோக்கி வேண்டுகின்ருர். அடியேன் புரிந்த குற்றங்களையெல்லாம் பொறுத்தருள வேண்டும் என்று கூறுகின்ருர்.

சொல்லால் வருங்குற்றம் சிந்தனையால் வருந்தோடம் செய்த
பொல்லாத தீவினை பார்வையில் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குகள் ஆயவும்மற்று
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே.

இந்தக் குற்ற வரிசையிலே முன்னணியில் இருப்பது "சொல்லால் வருங் குற்றம்". கவனியுங்கள். ஆண்டவன் அளித்த நாவால் அடுத்தவர்களைப்பற்றி குற்றங் குறைகளைக் கூறித் திரியக்கூடாது. அப்படிக் கூறுங்கால் இல்லாத குற்றத்தை இருப்பதாகச் சொன்னுல் அவர்கள் புரிந்த பாவத்தில் ஒரு பகுதி நம்மை வந்து சாரும். இதனை விளக்க ஒரு வரலாற்றைக் கூறுகின்றேன்.

பெரியவர் ஒருவர், காட்டிலே அரிய பெரிய தவம் புரிந்து கொண்டிருந்தார். எப்போதாவது கண் திறந்து கையேந்துவார். ஏதாவது கையில் விழுந்தால இன்னதது இனியது என்று பாராமல் அப்படியே வாயில் போட்டுக்கொண்டு கண்களை மூடித் தவஞ் செய்வார்.

அவ்வழியே ஒரு மன்னவன் வேட்டையாடித் திரும்பி வந்துகொண்டிருந்தான். அச்சமயம் மாதவ முனிவர் கையேந்தினுர். மன்னவன் அவர் பெருமை யறியாமல் அரசன் என்ற ஆணவத்தால் தான் ஏறி வந்த குதிரை யிட்ட விட்டையை எடுத்து மாதவர் கரத்தில் இட்டான். இட்ட விட்டையைப் பெருந்தவமுனிவர் வாயில் இட்டு உண்டு அபபடியே கண்களை மூடி தவத்தில் அமர்ந்தார். இது மன்னவன் கானகத்தில் ஒருவரும் அறியாத இடத்தில் தனிமையில் செய்த பாவம்.

அரசன் அவைக்களத்தில் அரியணை மீது அமர்ந்திருந்தான். அங்கே நாரத முனிவர் வந்தார். மன்னவன் அவரைத் தொழுதான். நாரதர் அவனை வாழ்த்தினுர். தனியே அவனை யழைத்து, "மன்னனே! நீ வேட்டையாடித் திரும்பி வரும்போது ஒரு பரம ஞானியாகிய தவசீலர் கரத்திலே குதிரையின் சாணத்தை யிட்டனை யல்லவா? அது நரகவுலகிலே

உ

முருகா

# கற்பு

## தவனேஸ்வரி

சரித்திரப் புகழ்பெற்ற நகரம் டெல்லி; அது பாண்டவர்கள் அரசாண்ட நகரம். இன்று அவர்களுடைய கோட்டை இடிந்தும், ஒரு முஸ்லீம் மன்னனுல் பழுது பார்க்கப்பட்டும், சில பகுதிகள் பழமையாகவும் ஒரு புறத்திலே காணப்படுகின்றன. அதற்குப் புராணகிலா என்று பெயர். புராண என்ருல் புராதனமானது. கில என்ருல் சிதைவுற்றது எனப் பொருள். அதற்குப் பழைய காலத்தில் இந்திரபிரஸ்தம் என்று பெயர்.

மிகப் பழைய காலத்தில் துஷ்யந்தன் முதலிய மன்னர்கள் அரசு புரிந்ததும் அந்த இடத்தில்தான; அப்போது அதற்குப் பிரதிஷ்டானபுரம் என்று பெயர். அது பின்னர் அழிந்துவிட்டது. காண்டா மரங்கள் முளைத்து வனமாகிவிட்டது. அதனுல் காண்டவ பிரஸ்தம் என்று பெயர் பெற்றது. அதனைத் திருதராஷ்ட்ரன் பாண்டவர்களுக்கு அளித்தான்; பாண்டவர்கள் தங்கட்குத் தலைநகராக அதனைக் கொண்டார்கள். அழகு குன்றிய அப் பழைய நகரைக் கண்ணபிரான் இந்திரனைக் கொண்டு விஸ்வகன்மன் மூலம் புதுப்பித்தார். அதனுல் இந்திர பிரஸ்தம் என்று புகழ் பெற்றது.

இத்தகைய டெல்லியில் கணவன் தாமோதரனுடன் நமது தவனேஸ்வரி என்ற உத்தமி வாழ்ந்துகொண்டிருந்தாள். அவளுடைய கணவன் ஒரு ஆங்கிலேயன் கம்பெனியில் நானூறு ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தான். வீட்டு வாடகை மட்டும் நூறு ரூபாய்; மிகுதியை வைத்துக்கொண்டு ஒருவாறு ஆடம்பரமின்றியும் சிரமமின்றியும் தவனேஸ்வரி குடும்பத்தை நடாத்திக்கொண்டுவந்தாள். வயது சென்ற மாமனும் மாமியும் இருந்தார்கள். அவர்களைத் தெய்வம்போல் பாதுகாத்து வந்தாள். எழுந்தவுடனே மாமன் மாமிகளை வணங்குவாள். சிலமாதங்கள் டெல்லியில் அதிகக் குளிர். அதனுல் பல்தேய்க்க வெந்நீர் தருவாள். குடிப்பதற்குச் சுவைநீர் (காப்பி) தருவாள். பின்னர் வெந்நீரால் இருவர்களையுங் குளிக்க வைப்பாள். இதற்கிடையில் கணவனுக்கு உரிய பணிவிடைகளையும் புரிந்து காலையுணவு தந்து கணவனைத் தொழிற்சாலைக்கு அனுப்புவாள்; வீட்டு வேலைகளைப் பம்பரமாகச் சுழன்று செய்து வீட்டைக் கண்ணுடிபோல் வைத்திருப்பாள். யாராவது பார்த்தால் வீடு பளபளவென்றிருக்கின்றதே என்று எண்ணுமாறு பரிசுத்தமாக வைத்திருப்பாள். அன்றியும் காலத்திலே சமைத்து மாமன் மாமிக்கு உணவு படைத்து "சாப்பிடுங்கள்; இன்றைக்கு பன்னீர் ரசம்; இன்றைக்கு விளாம்பழ ரசம்; இன்றைக்கு

மிளகு ரசம்; உடம்புக்கு நல்லது; இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்கள். முதிர்ந்த வயதில் உணவு பலத்தினுல்தான் உலாவ முடியும். ஊறுகாய் வைத்திருக்கின்றேன்; பசுவின் தயிர் வெண்ணெயுடன் இருக்கின்றது. இன்னும் ஒரு பிடி சாப்பிடுங்கள்'' என்று தேன்போல் பேசி குழந்தைகட்கு ஊட்டுவது போல் கொஞ்சம் கொஞ்சமாகப் படைத்து நிரம்பச் சாப்பிடுமாறு செய்துவிடுவாள். முற்காலத்தில் சாவித்திரிதேவி மாமன் மாமிக்குப் பணிவிடை செய்ததுபோல் செய்வாள். படுக்கை விரித்துப் படுக்க வைப்பாள். கால்களை வருடுவாள். விசிறி எடுத்து சற்று நேரம்வரை விசிறுவாள். அடிக்கடி 'என்ன வேணும்?' என்று கேட்பாள்.

மாமனர் ஒருநாள் மனைவியைப் பார்த்து தனித்த இடத்தில் கூறுகினறுர். "பெண்ணே! நாம் கிராமத்தில் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தோம். வயிற்றை வாயைக் கட்டி நிரம்ப சிரமப்பட்டுப் பையனைப் படிக்க வைத்தோம். அவன் டெல்லியில் வேலைக்கு அமர்ந்தவுடன் பிள்ளையை விட்டுப் பிரிய வேண்டுமேயென்று வருந்தினேம். பின்னர் B. A. பாஸ் பண்ணிய இவளை (தவனேஸ்வரியை) மணந்துகொள்ளப் போகிறேன் என்ருன். அப்போது நீ "கூடவே கூடாது; B.A. படித்த பெண் அடங்கி நடக்கமாட்டாள், மாமன் மாமியை மதிக்கமாட்டாள். குடும்பத்திற்குப் பட்டுப் படிந்து நடக்கமாட்டாள். ஏழை வீட்டில் எங்கேயாவது ஒரு பெண்ணை மணந்து கொள்'' என்று தாமோதரனுக்குப் பன்முறை வற்புறுத்திச் சொன்னுய். அவன் ஒரே மோகமாய் 'நான் இவளைத்தான் மணந்துகொள்வேன்'' என்று ஒரு காலிலே நின்று கல்யாணஞ் செய்துகொண்டான். "என் பேச்சை இவன் கேட்கவில்லையே? தறுதலை'' என்று நீ என்னிடம் இவனை நிந்தித்தாய். "இவள் இவ்வளவு சிகப்பாகவும் வடிவாகவும் இருக்கின்ருளே? எனனை மதிப்பாளா? புருஷனுடன் சேர்ந்து நமக்கு ஒரு கவளம் சோறு போடுவாளா? ஒரு அணு நமக்கு அனுப்ப வொட்டுவாளா? என் மகனுக்கு மயக்க மருந்து போட்டுக் கெடுத்துவிடுவாள். இவள் கண் விளக்கு மாதிரி எரிகின்றதே. நாம் தள்ளாத வயதில் அலையவேண்டி வரும்'' என்று நீ என்னிடம் கூறினுய். திருமணத்தில் அட்சதை கூட நீ போடவில்லை, உனக்குப் பெரிய பயங்கரம் ஏற்பட்டது.

இப்போது பார்த்தனையா நமது மருமகளின் குணத்தை? அவன் திருமணம் ஆனவுடன் தனித்துக் குடித்தனம் புரிய விரும்பி அவளை அழைத்துக்கொண்டு இங்கு வந்தான். மருமகள், "தளர்ந்த வயதில் பெரியவர்கள் தனித்திருக்கக்கூடாது; நம்முடன் இருக்கட்டும். உங்களைப் பெற்று வளர்த்துப் படிக்க வைத்த அவர்கள் சுகமாக வந்து நம்முடன் இருந்து கவலையில்



லாமல் இருக்கட்டும்'' என்று நமது மகனிடம் பலமுறை வற்புறுத்திக் கூறி, கடிதம் எழுதி நம்மைத் தருவித்துக்கொண்டாள். "B.A. படித்த பெண்; மெத்தத் தலை கிறுக்காகவும் அடங்காப்பிடாரியாகவும் இருப்பாள்'' என்று நீ நினைத்தாய். ஆ! ஆ!! அவள் சாந்த வடிவமாகவும், அடக்கமே அணிகலமாகவும், விநயமே விரதமாகவும் கொண்டிருக்கின்ருள்.

கணவனுக்கும் ஆகவேண்டியதைக் குறைவின்றிச் செய்கின்ருள். அதனைவிட நம்மை அதிகம் கவனமாகப் பாதுகாத்து வருகின்ருள். உன் புடவையையும் என் வேட்டியையும் தோய்த்து உலர்த்தி மடித்து வைக்கின்ருள். அந்தப் பயல் என் வேட்டியை ஒருநாள்கூட தோய்க்கவில்லை. பெற்று வளர்த்தகடனுக்கு அவன் செய்யவேண்டியவேலை எங்கிருந்தோ வந்தவள் இவள் சிறிதுகூட மனங் கோணுமல் சகல பணிவிடைகளும் செய்கின்ருள். பெண்ணே! நினைத்தால் நெஞ்சு உருகுகின்றது. (கண்களில் இருந்துவந்த தண்ணீரைத் துடைத்துக் கொண்டார்) வயிற்றில் பிறந்த மகன் இப்படித் தொண்டு செய்வாளா? எண்ணிப்பார்; படித்த பெண்; படிந்திருக்கமாட்டாள் என்றனையே? படித்த பெண்களிலும் நல்லவர்கள் இருக்கின்ருர்கள். படியாத பெண்கள் எல்லாரும் நல்லவர்கள் என்று எண்ணக்கூடாது. படித்தவர்களிலும் நல்லவர்கள் உண்டு; படியாதவர்களிலும் கெட்டவர்கள் உண்டு; அறிவு மூளை சம்பந்தமானது. பண்பு இதய சம்பந்தமானது. நல்ல உள்ளம் படைத்தவர்களைக் காண்பது அரிது; படித்தவர்கள் பலரைக் காணலாம். பண்புடையவர்கள் சிலரைக்கூட காண முடியாது. அதனுல் திருவள்ளுவர்,

அரம்போன்ற கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

என்ருர்.

ஆதலால் நமது மருமகளுக்கு அறிவு பண்பு இரண்டையும் கடவுள் கொடுத்திருக்கின்ருர். அவள் ஒரு தெய்வப் பிறப்பு. நமது குலஞ் செய்த தவம், அவள் நமக்குக் கிடைத்தாள். கடவுள் தந்த வரப்பிரசாதம்......'' என்றுசொல்லிக்கொண்டிருக்கின்றபோது தவனேஸ்வரி அங்கு வந்துவிட்டாள். அவளைக் கண்டு பேச்சு முற்றுப்பெருமல், ஸ்ரீரங்கம மொட்டைக் கோபுரம் போல் நின்றுவிட்டது. கடைசியில் சொன்ன இரண்டொரு சொற்கள் தவனேஸ்வரி காதில் வீழ்ந்தது. அதைக் கேட்டு உள்ளங்குளிர்ந்தாள். மாமன் மாமியர் தன்னைப் பாராட்டுகின்ருர்கள் என்று அறிந்து மகிழ்ந்தாள்.

"மாமா! என்ன மாமியிடம் ரகசியம் பேசிக்கொண்டிருக்கின்றீர்கள். நான் வந்தவுடனே நிறுத்திவிட்டீர்களே! உங்கள்

பேச்சுக்கு நான் இடையூறு செய்துவிட்டேன். மன்னித்துக் கொள்ளுங்கள். கல்யாணத்திற்கு முன் நீங்கள் இருவரும் சந்தித்த சந்திப்பைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தீர்களோ? கொஞ்சம் சுவைநீர் சாப்பிடுங்கள். இது மிக்க உயர்ந்தவகையில் தயாரித்தேன். அப்புறம் பேசுங்கள் நான் போய்விடுகின்றேன். உங்கள் பேச்சுக்குத் தடையாக நான் இல்லை'' என்று சற்று இண்டலாகவும் விநயமாகவும் கூறினாள். இரண்டு வெள்ளிக் குவளைகளில் சூடான சுவைநீர் வைத்தாள். மருமகளை நோக்கி, "அம்மா! ரகசியம ஒன்றுமில்லை; உனக்குத் தெரியாத ரகசியம் என்ன இருக்கின்றது? சும்மா எனனமோ பொழுது போக வேணுமே; பேசிக்கொண்டிருந்தோம். சதா சுழன்று சுழன்று வேலை செய்கின்றாயே; சற்று இளைப்பாறிக்கொள். உடம்பை யும் பேணிக்கொள். என்னமோ உன்னை நாங்கள் மருமகளாகப் பெற்றோமே. எங்கள் புண்ணியத்தைப் பற்றி பேசிக்கொண் டிருந்தோம். உனக்குப் பகவான் நோயற்ற வாழ்வையும் நீண்ட வாழ்நாளையும் தருவாராக'' என்று மாமனார் வாழ்த்தி ஞர். அந்த வாழ்த்து ஜீவகளையுடன் வந்தது. அவர் கண் களில் ஆனந்தக் கண்ணீர் துளித்தது. தவனேஸ்வரிக்கு உள்ளங்களித்தது. பின்னர் வீட்டு வேலையைக் கவனிக்கச் சென்றாள்.

அவர்கள் குடும்பம் இன்பமாகத் துன்பமின்றி நடந்தது. தார் பாதையில் செல்லுங் கார்போல் சுமுகமாக வாழ்வு சென்றது.

தவனேஸ்வரிக்குக் குழந்தை பிறக்கவில்லையே யென்று மாமனும் மாமியும் வருந்தினார்கள். முருகனை வேண்டினார்கள். "அடியவர் இச்சையில் எவையெவை யுற்றன அவை தருவித் தருள் பெருமாளே'' என்று அருணகிரிநாதர் அருளிச் செய்த வாறு கந்தவேள் கருணை புரிந்தான். தவனேஸ்வரி வயிறு வாய்க்கப் பெற்றாள். கிழவருக்கும் கிழவிக்கும் தலை கால் தெரி யாத மகிழ்ச்சி.

"ஆண் குழந்தை பிறக்கும்'' என்றார் கிழவர்; "போங்கள் முதல் முதலில் பெண் குழந்தை பிறக்கட்டும்'' என்றாள் கிழவி. "ஏண்டி! உனக்கு புத்தி யிருக்கின்றதா? முதல் பிள்ளை சீமந்த புத்திரனாகப் பிறக்கட்டும்'' என்றார்.

"ஆமாம்! எனக்குப் புத்தியில்லை; புத்தியில்லாதவளை ஏன் கல்யாணம் பண்ணிக்கொண்டீர். முதலிலே மகாலட்சுமி மாதிரி பெண் குழந்தை பிறக்கட்டுமே. அப்புறம் ஆண் குழந்தை பிறக்கட்டும். யார் ஆண் குழந்தையை வேண்டா மென்கிறார்கள்? தலைக் குழந்தை பெண்ணாகப் பிறக்கட்டும்''



"சீ! வாயை மூடு; பெட்டை குழந்தைக்கு என்ன அவசரம்? தலைக் குழந்தை ஸ்ரீராமரைப்போல் ஆணாகப் பிறக்கட்டும். என் சொல்தான் பலிக்கும்; பெண் பிறக்காது; ஆண்தான் பிறக்கும்''

"பேசாமல் இருங்கள். ரொம்பத் தெரிஞ்ச மாதிரி ஏன் பேசுகின்றீர்கள். பெண் குழந்தை பிறந்தால் "குடும்பத்திற்கு நல்லது. நமக்கென்ன என்று பேசாமல் ஒருபுறம் இருங்க ளேன்''

"உனக்கென்ன அத்தனைக் கர்வம்; நான் பேசக் கூடாது. நீ மட்டும் பேசலாமோ? உனக்கு மட்டும் ரொம்பத் தெரிந்து விட்டதோ? நீ சர்வ கலாவல்லபையோ? அசடே! இவ்வளவு காலமாகக் குழந்தை இல்லாமல் இருந்த வீட்டில் தலைக் குழந்தை ஆணாகப் பிறந்து ஜிலு ஜிலு என்று தவழ்ந்து விளை யாடட்டுமே''

"ம்......முடியாது. பெண் தான் வேண்டும்''

"ஓங்கி ஒரு அறை கொடுத்தார் பெரியவர். இதனைத் தொலைவில் இருந்து கவனித்த தவனேஸ்வரி வந்து மாம னாரைத் தடுத்தாள். "என்னைங்கோ! இத்தனை வயதான பிறகு மாமியை அடிக்கின்றீர்களே! மாமி என்ன குற்றம் புரிந்தார்கள். அப்படியே குற்றம் புரிந்தாலும் பொறுக்க வேண்டாமா? நாம் செய்கின்ற குற்றங்களை யெல்லாம் கடவுள் பொறுக்க வில்லை யா? சின்னவர்கள் செய்த பிழையைப் பெரியவர்கள் பொறுக்க வேண்டாமா? தங்களுக்கு ஏதாவது வேண்டுமானால் என்னிடம் சொல்லுங்கள். மாமி மகிழ்ச்சியாக இருக்கட்டும்'' என்றாள். அவருக்கு வெட்கமாக இருந்தது. அத்துடன் அந்த நிகழ்ச்சி நின்றுவிட்டது.

தவனேஸ்வரி மறுநாள் மாமிக்குக் கால் பிடித்துக்கொண் டிருக்கும்போது, மெல்லிய குரலில், "மாமீ! நேற்று மாமா உங்களை அடித்தமாதிரி இருந்ததே? என்ன காரணம்? நான் ஏதாவது வேலை செய்யவில்லை யென்று அதற்காகத் தங்களைக் கோபித்துக்கொண்டாரா? வயது சென்ற பின் சாந்தமாகவும் சமாதானமாகவும் இருக்கவேண்டுமே; என்னிடம் சொல்லக் கூடியதாக இருந்தால் சொல்லுங்கள். என் குற்றத்தை என் னிடம் கூறினால் நான் திருத்திக்கொள்வேன்'' என்றாள்.

மாமி, "குழந்தாய்! அவர் எப்போதும் அப்படித்தான். முன் கோபக்காரர். சூரியனிடத்தில் இருள் இருக்குமாயின் உன்னிடத்தில் குற்றமிருக்கும். குலமணியே! நீ கருவுற்றது கண்டு எங்களுக்கு அடங்காத ஆனந்தம். பெண் பிறக்கும் என்றேன் நான்; ஆண்பிறக்கும் என்றார் அவர். இதில் வாக்குவாதம். வேறொன்றுமில்லை.

தனக்குள் தவனேஸ்வரி சிரித்துக்கொண்டாள். "மாமீ! ஆணோ பெண்ணோ? ஏதாவது ஒன்று பிறக்கட்டும், அது கடவுள் சித்தம். நாம் நினைக்கின்றபடி என்ன நடக்கின்றது? அவனன்றி ஓர் அணுவும் அசையாது. இதற்காக நீங்கள் ஏன் சச்சரவு செய்துகொள்ளுகின்றீர்கள்? ஒரு குடும்பத்திற்கு ஆணுந் தேவைதான். பெண்ணுந் தேவைதான்......" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது பெரியவர் வந்தார். "அம்மா! அவள் என்ன உளறுகின்றாள்?" என்று வினவினார்.

"ஒன்றுமில்லை மாமா! உடம்பைக் கவனமாகப் பார்த்துக்கொள் என்று எனக்கு அறவுரை கூறினார்கள். மாமா! எனக்கு ஒரு சின்ன சந்தேகம். நான் யாரிடம் கேட்பேன்? நமது முகத்தில் இரண்டு கண்கள் இருக்கின்றன. இரண்டும் முகத்திற்குத் தேவைதான். இதில் எது வேணும், எது வேண்டாம் என்று சந்தேகம்" என்றாள் தவனேஸ்வரி.

பெரியவர் ஆண் குழந்தை வேணுமா? பெண் குழந்தை வேணுமா என்று தாங்கள் வாதிட்டு அடித்துக்கொண்டதற்காகத்தான் மருமகள் ஒரு சூடு தருகின்றாள். ஆண் குழந்தை ஒரு கண்; பெண் குழந்தை ஒரு கண். இதில் என்ன தர்க்கம்? என்ற பொருளில் பேசுகின்றாள் என்பதை விளங்கிக்கொண்டார். "அம்மா! இரண்டு கண்களும் வேண்டுந்தான். கண்களில் உயர்வு தாழ்வு இல்லை......" என்று கூறும்போது மகன் தாமோதரன் வந்தான்.

உடனே தவனேஸ்வரி யெழுந்து போய் கணவனுக்கு சிற்றுண்டி படைத்துச் சுவைநீர் தந்தாள.

கிழவரும் கிழவியும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். அப்பார்வையில் நாணம் வழிந்தது. ஆண் பெண் இருகண். என்ற பொருளிலே வைத்து மருமகள் தங்கள் அறியாமைக்கு விடைகொடுத்த சாதுர்யத்தை எண்ணி இருவரும் ஆனந்தமும் வெட்கமும் அடைந்தார்கள்.

பத்துத் திங்கள் நிறைந்தபின் பெரியவர்கள் இருவர்களுடைய எண்ணங்களும் நிறைவேறிவிட்டன? எப்படி? தவனேஸ்வரிக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தன. ஆண் ஒன்று பெண் ஒன்று. 'என சொல்தான் பலித்தது' என்றாள் கிழவி; "போடி! முதலில் பிறந்தது ஆண்தான்; என் சொல்தான் பலித்தது" என்றார் கிழவர். எப்படியோ ஆணும் பெண்ணும் ஒரே சமயத்தில் பிறந்துவிட்டன.

ஆண் குழந்தையைப் பெரியவர் கையில் வைத்துக் கொஞ்சுவார். பெண் குழந்தையைப் பெரியம்மாள் வைத்துக் கொஞ்சுவாள்; இப்படி இருவர்கட்கும் நல்ல பொழுது போக்கு. பேரனும் பேத்தியும் நிலத்தில் வளராமல் பாட்டன் பாட்டி கையில் செல்வமாக வளர்ந்தார்கள்.



குழந்தைகள் அதிர்ஷ்டமோ! என்னமோ சொல்லமுடியாது தாமோதரன் வேலை பார்த்த கம்பெனி உடைந்துவிட்டது. என்ன செய்வான் பாவம்! டெல்லி பெரிய நகரம். பணம் இல்லாமல் வாழ்க்கை வண்டி ஓடாது. குழந்தைகள் வேறு. மகிழ்ச்சி நிலவிய குடும்பத்தில் கவலை யுலவியது. தாமோதரன் அங்கும் இங்கும் வேலைக்கு ஓடியலைந்தான். தக்கவேலையாக ஒன்றும் அமையவில்லை. மனம் உடைந்துபோனான். அவன் முகத்தில் இருந்த ஒளி குன்றிவிட்டது. 'குழந்தைகள் பிறவாமல் இருந்தால் நன்றாக இருந்திருக்குமே' என்று கருதினான். பின்னர் ஒருவர் இருவர் இடம் வேலைக்கு அமர்ந்தான். அவர்கள் நாயைப்போலவும் பேயைப் போலவும் இவனை நடத்தினார்கள். தாயைப்போலே நடாத்துகின்ற தலைவர் ஒருவர் இருவர்தானே உலகிலே இருக்கின்றனர். தன்மானம் இழந்து வேலைசெய்து அதனால் வயிற்றை வளர்க்க அவனுடைய தூய உள்ளம் ஒருப்படவில்லை. வேலையைவிட்டு நின்றுவிட்டான்.

தாய்மையடைந்த தவனேஸ்வரி தன் கணவனைக் கண்டு "ஏன் வேலைக்குப் போகவில்லையா?" என்று வினவினாள்.

"பெண்ணே! உலகிலே பண்பு இல்லாத பேயர்கள்தான் நிறைந்திருக்கின்றார்கள். சிலர் செல்வம் படைத்தவுடனே தம்மை இந்திரன் என்றும் குபேரன் என்றும் கருதிக்கொண்டு தலைநிமிர்ந்து தம்மிடம் அலுவல் பார்ப்பவர்களை அற்ப நாயினும் கடைப்பட்டவர்களாக நினைத்து (மேல் விழுந்து கடிக்காத குறை ஒன்றுதான்.) சீறி விழுந்து பேசுவதும் விரட்டுவதும் வைவதுமாக நடக்கின்றார்கள். இத்தகைய ஈனர்களிடம் நான் வேலை பார்த்து வயிற்றை வளர்ப்பதைவிட மாள்வது சிறப்பு. பெண்மாணிக்கமே! உன்னையும் உன் குழந்தைகளையும் தள்ளாத தாய் தகப்பனாரையும் பார்த்து நான் உயிரோடு இருக்கின்றேன். எனக்கு வாழ்வு அலுத்துப்போய்விட்டது. இனி என்னால் ஒருவனிடம் போய் அடிமை வேலை செய்ய முடியாது. ஏதாவது கொஞ்சம் பொருள் இருந்தால் முதலாக வைத்து ஒரு சிறு வியாபாரம் புரியலாம். இலாபம் கொஞ்சம் வந்தாலும் கவலையின்றியும் ஒருவருக்குக் கைகட்டி சேவகஞ் செய்யாமலும் அரை வயிறு கஞ்சி குடிக்கலாம். முதலில்லையே? என் செய்வது?" என்று கூறி ஏங்கினான்.

வேலை போய்விட்டபின் நகைகளை ஒவ்வொன்றாக விற்றுக் குடும்பத்தை நடத்தியபடியால் இனி நகைகளை விற்கவும் வழியில்லை. திருமாங்கல்யம் தவிர வேறு ஒன்றுமில்லை. தவனேஸ்வரி தவியாகத் தவித்தாள். கணவனை நோக்கி, "நீங்கள் கவலைப்படவேண்டாம். நான் கௌரி பூஜை செய்வேன். நல்லகாலம் பிறக்கும்" என்றாள்.

மறுநாள் வெள்ளிக்கிழமை. வீடு முழுவதும் கழுவினுள். கோலமிட்டாள். மாவிலை தோரணங் கட்டினுள். நிரம்ப விளக்குகளை யேற்றினுள். நடு வீட்டிலே வாழை யிலை யிட்டு பச்சரிசி பரப்பி அதன்மீது ஒரு கலசம் வைத்து மாவிலையும் தேங்காயும் தருப்பையும் வைத்தாள். சந்தனங் குங்குமம் அட்சதையிட்டாள். மலர்மாலை சாத்தினுள். ஊதுபத்தியேத்தினுள். பழம் பால் தாம்பூலம் தேங்காய் இவைகளை நிவேதித்தாள். கௌரி பஞ்சாட்சரம் செபித்தாள். அக்கம் பக்கம் எதிரில் உள்ளவர்கள் பெருந்தனவந்தர்கள். அந்த வீடுகளில் உள்ள ஆண்களும் பெண்களும் வந்து தவனேஸ்வரி வழிபடுகின்ற கௌரியை வணங்கிவிட்டுச் சென்றுர்கள். இப்படி ஒருவாரம் தொடர்ந்து பூஜை சிறப்பாக நடந்துவந்தது.

ஒரு நாள் தவனேஸ்வரி பூஜையில் அமர்ந்திருந்தாள். அருகில் உள்ள தனவந்தர்கள் உயர்ந்த பாத்திரங்களில் பாலும் தட்டில் தேங்காய் பழங்களும் கொணர்ந்தார்கள். கௌரி பூஜை முடிந்தவுடன் நிவேதித்த பாலையும் தேங்காய் பழங்களையும் எல்லோருக்கும் பிரசாதமாக வழங்கினுள். வீதியில் உள்ள வறியவர்கட்கும் கொடுத்தாள். மாலையில் அவரவர்களுக்கு உரிய பாத்திரங்களையும் தட்டுக்களையும் அவரவர்கள் வீட்டில் கொண்டுபோய்க் கொடுத்தாள். அப்பாத்திரங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சிறிய பாத்திரமும், தட்டுக்குள் ஒரு சிறிய தட்டும் இருந்தன. அவர்கள் "என்ன அம்மா! இந்த பாத்திரத்துக்குள் ஒரு சிறு பாத்திரமும், தட்டுக்குள் சிறு தட்டும் உளவே? இந்தா இவை எங்களுடையவையல்ல. கொண்டுபோ'' என்றுர்கள்.

தவனேஸ்வரி, "அம்மா! இவை என்னுடையவும் அல்ல. கௌரி கருணையால் ஒவ்வொரு பாத்திரமும் குட்டி போடுகின்றது. ஆகவே இவற்றை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்'' என்றுள். இவற்றைக் கேட்டு அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். பேராசையுங் கொண்டார்கள்.

பின்னர் மறுநாள் ஆசையால் விழுங்கப்பட்ட தனவந்தர்கள் பலப்பல வெள்ளிப் பாத்திரங்களில் பாலும் தேனும் பஞ்சாமிர்தமும் வெள்ளித் தட்டுக்களில் சர்க்கரையும் பழமும் வெற்றிலை பாக்கும் தேங்காய்களும் கொணர்ந்தார்கள்.

வழக்கம்போல் பூஜை நடந்தது. பிரசாதங்களை ஒன்றுபடுத்தி அனைவருக்கும் தவனேஸ்வரி வழங்கினுள். ஏழைகட்கும் வழங்கினுள். மாலை ஒவ்வொரு பாத்திரம் தட்டு எல்லாவற்றிலும் ஒவ்வொரு குட்டி ஏனங்களுடன் அவரவர்களிடம் சேர்த்துவிட்டாள். பணக்காரர்கட்கு மீண்டும் பேராசை அதிகப்பட்டது. சிலர் "இருக்குமா? பாத்திரம் குட்டிபோடுமோ? இது ஒருவேளை கௌரியின் வரப்பிரசாதமோ? அவள் ஏழை



யாயிற்றே. அவள் வேண்டும் என்றே ஒவ்வொரு ஏனம் வாங்கித்தர அவளுக்கென்ன பயித்தியமா?'' என்று பலவாறு பேசிக்கொண்டார்கள்.

ஒருநாள் பெரும் பணக்காரர்கள் எல்லாரும் தங்கப் பாத்திரங்கள், தங்கத் தட்டுகள், தங்கக் கூசாக்கள் கொணர்ந்தார்கள். பூஜை முடிந்தது. எல்லோரும் இன்று நமக்கு தங்கப்பாத்திரங்கள் குட்டிபோட்டுவரும் என்ற ஆசையுடன் விடு திரும்பினுர்கள். மாலை தவனேஸ்வரி, எல்லோரையுங் கண்டாள். "அம்மா! இன்று மழைபொழிந்ததல்லவா? பூஜையில் ஏதோ பிழையோ? என்னமோ? ஒன்றும விளங்கவில்லை. பாத்திரங்கள் குட்டிபோடும்போது எல்லாம் இறந்துவிட்டன. இறந்ததோடு அமையாது மறைந்தும் விட்டன'' என்றுள்.

அவர்கள் தலையில் விழுந்தது இடி. பாத்திரம் பத்து நாட்கள் குட்டி போட்டது என்றதை ஒப்புக்கொண்டு இரட்டை இரட்டைப் பாத்திரம் பெற்றுக்கொண்டு மகிழ்ந்தவர்கள், பிரசவிக்கின்றபோது இறந்து மறைந்தன என்பதை மட்டும் ஒப்புக்கொள்ளாமல் இருப்பது முறையோ! இஞ்சி தின்ற வானரங்களைப்போல் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டார்கள். தவனேஸ்வரி, "அம்மா! நீங்கள் வருந்த வேண்டாம். நான் விடாப்பிடியாகக் கௌரியைப் பூசிப்பேன்; இறந்து மறைந்தவர் எழுந்து வந்தாலும் வரக்கூடும்'' என்று கூறிச் சென்றுள்.

பின்னர் அயலறியாது தங்கப் பாத்திரங்கள் விற்கப்பட்டன. அதனை முதலாகக் கொண்டு கணவனை வாணிபம் புரியுமாறு செய்தாள். கௌரி கருணை தொழில் நன்ருக நடந்தது. வியாபாரம் வளமாகச் சிறந்தது. லாபம் ஏராளமாக வந்தது. வீடு வாசல் வண்டி வாகனம் ஆடை அணிகலம் யாவும் ஏற்பட்டன. ஐந்து, ஆறு ஆண்டுகளில் தவனேஸ்வரி கோடீஸ்வரியானுள்.

ஒருநாள் அவரவர்கள் கொடுத்த தங்கப் பாத்திரங்களை அந்தந்த அளவில் செய்து அவரவர்களிடம் கொண்டுபோய் "அம்மா! கௌரி கருணையால் அந்தப் பாத்திரங்கள் உயிர் பெற்றுக் கொண்டன. ஆனுல் குட்டி போடவில்லை. பெற்றுக்கொள்'' என்று உடைமைகளை உடையவர்கள்பால் சேர்த்துவிட்டாள். (வட்டிக்கு வாங்காமல் முதல் கிடைத்ததுதான் மிச்சம்).

அவரவர்கள் மாண்டவன் மீண்டதுபோல் மகிழ்ந்தார்கள். தவனேஸ்வரி எப்போதும்போல் மாமன் மாமிக்குத் தொண்டு புரிந்துகொண்டும், குழந்தைகளைப் பேணியும், கணவனுரை அன்பாக உபசரித்தும் கண்ணியமாகக் குடும்பத்தை நடாத்திக் கொண்டு வந்தாள். பல அறங்களையும் புரிந்தாள்.

---

முருகா

# கால தரிசனம்

(கி. வா. ஜகந்நாதன்)

முருகன் தன் அன்பர்களுக்கு என்றும் துணையாக நிற்ப வன். எத்தகைய இடையூறுகள் வந்தாலும் முன்னின்று காப் பவன். உயிர்களுக்கு வரும் துன்பங்களில் மிகப் பெரிது இறப் பாகிய துன்பம். "காலன் வரும்போது என்ன துன்பம் உண் டாகுமோ?" என்று கதறி அழுத மக்கள் பலர், யமபயம் உண்மையில் ஒருவனுடைய உள்ளத்தில் பதிந்துவிட்டால் அவன் உடனே அந்தப் பயத்தைப் போக்கிக்கொள்ளும் வழி என்னவென்று ஆராய்வான். இறைவனைப் புகல் புகுவது ஒன்றுதான் அதற்குப் பரிகாரம் என்பதை உணர்ந்து பக்தி செய்ய முற்படுவான்.

"ஆவிக்கு மோசம் வருமாறு அறிந்துன் அருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றிலேன்"

என்று அருணகிரிநாதர் கூறுகிறார். முருகனை வழிபட்டு அன்பு நெறியில் நிற்பவருக்கு யமபயம் இல்லை என்பதைப் பல இடங்களில் அவர் எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

"காலா யுதக்கொடி யோன்அரு ளாய கவசம் உண்டுஎன்
பால்ஆ யுதம்வருமோ யமனோடு பகைக்கினுமே"

என்று படர்க்கையிலும்,

"வாரா தகல்அந்த காவந்த
போதுயிர் வாங்குவனே"

"கட்டிப் புறப்பட டாசக்தி வாள்என்றன் கையதுவே"

"திண்டாட வெட்டி விழவிடுவேன்"

என்று முன்னிலையிலும் வைத்துப் பாடுகின்றார்.

உடம்பு எடுத்த உயிர்கள் இறந்துபடுவது உறுதி. ஆனால் மரணத்தில் இரண்டுவிதம் உண்டு. மீண்டும் பிறக்கும்பொருட்டு இறப்பது, மீட்டு இங்கு வாராமல் வீட்டின்பத்தை அடைய இறப்பது என்பன அவை. இறைவனுடைய திருவருள் பெற்று வாழ்பவர்கள் உடம்பை விடும்போது விடுதலை பெற்ற நிலையில் இன்புற்று அவனடியை அடைகிறார்கள். மற்றவர்கள் வேறு பிறவியை எடுக்கிறார்கள்.

நல்ல ஆன்மாக்கள் உயிர்விடும்போது அவர்கள் உயிர்களை இறைவனுடைய ஏவலாளர்களாகிய கணங்கள் வந்து அழைத் துச் செல்லும் என்று புராணங்கள் கூறுகின்றன. அவ்வுயிர்கள் மரணத்தால் துன்பம் அடையாமல் இன்பவாழ்வின் தலை வாசல் திறந்தது போன்ற நிலையை அடைவதையே அப்படிச்



சொல்லியிருக்கிறார்கள். அதற்கு நேர்மாறாக, அருள்பெரு உயிர்களை, மீட்டும பிறக்க வேண்டியிருக்கும் ஆன்மாக்களை, காலதூதுவர்கள் அழைத்துச் செல்ல வருவார்கள். என்று புராணங்கள் கூறுகின்றன. மேலும் மேலும் துன்புறும் நிலையில் உள்ளவை அவ்வுயிர்கள் என்பதையே அது குறிக்கின்றது.

முருகனுடைய திருவருளைப் பெறுதவர்கள் உயிர் விடும் போது காலனுடைய தரிசனத்தைத்தான் பெறுவார்கள. அருள பெற்றவர்களோ முருகன் தரிசனத்தைப்பெறுவார்கள். காலன் தரிசனமும் வேலன் தரிசனமும் அந்த ஆன்மாக்கள் இந்த உலக வாழ்வில் செய்த செயல்களைப் பொறுத்தே கிடைக்கின்றன.

"முருகன் அடியார்களுக்கு உயிர்விடும் காலையில் கால தரிசனம் இராது" என்று சொல்வதுதான் பொருத்தமாக இருக்கும். அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய திருப் புகழில் ஓரிடத்தில் இதற்கு மாறான பொருள்கொள்ளும் வகையில் ஒரு பகுதி வருகிறது.

"புவிக்குன் பாதம் அதைநினை பவர்க்கும்
காலதரிசனை புலக்கண் கூடும் அதுதனை —நினையாதே
புரட்டும் பாவ சமயிகள் நெறிக்கண்
பூது படிறரை"

இந்தப்பாட்டுக்கு, "உலகில் நின் திருவடியை நினைபவருக்கும் கால தரிசனம் கண்ணுகிய புலனில் தோன்றும். அந்த உண்மையை நினையாமல் புரட்டிப் பேசும் பாவிகளாகிய சமயிக ளுடைய வழியிலே புகும் வஞ்சகரை" என்று பொருள் கொள்ளலாம்.

"புவிக்கு உன்பாதமதை நினைபவர்க்கும் கால தரிசனை புலக்கண் கூடும்" என்ற பகுதிதான் இங்கே ஆராய்ச்சிக்கு உரியது. புவிக்கு என்பது புவியில் என்னும் பொருள் உடை யது; உருபு மயக்கம். பாதமதை–பாதத்தை; அது–பகுதிப் பொருள்விகுதி. 'உன் திருவடியை நினைபவர்களுக்குக் கால தரிசனை கண்ணில்படும்' என்று பொருள்கொள்ளும்படி இப் பகுதி அமைந்திருக்கிறது. அருணகிரிநாதர் பிற இடங்களில் கூறும் கருத்துக்கு இது மாறுபாடாக இருக்கிறது. அது மட்டும் அன்று; 'நினைபவர்க்கும் கால தரிசனை கூடும்' என்ப தில் வரும் உம்மைக்கு ஒரு பொருளும் இருப்பதாகத் தோன்ற வில்லை. மற்றவர்களுக்குத் தோன்றுவதோடு, அவர்களுக் கும் தோன்றும் என்று கொள்ளலாமா? அது சிறப்பன்று; பொருத்தமாகவும் இல்லை.

இந்த அடி, "உன்னை நினைக்கிற அன்பர்களுக்கும் காலன் தரிசனை கூடுமா? அவர்கள் முன் அவன் தலையைநீட்டுவானா?" என்று பொருள் பண்ணும்படி இருந்தால் மிகவும் பொருத்த

மாக இருக்கும். அப்போது உம்மைக்குப் பொருள் கிடைக்கும். அது உயர்வு சிறப்பும்மையாகிவிடும்.

"புலக்கண் கூடுமா?" என்று வினைப் பொருள் கிடைத்தால் இந்தபபகுதி சிறப்பாகவும் பொருத்தமாகவும் அமையும், "புலக்கண் கூடும்" என்பது சந்தத்தில் அமைந்தமையால். அங்கே வினவைக் குறிக்கும் இடைச் சொல் இருந்து போயிருக்கவேண்டும் என்று சொல்ல இயலாது. ஆதலால் பாடபேதம் இருக்கலாம் என்று சொல்வதற்கும் வழியில்லை.

"புலக்கண் கூடும்" என்பதையே வினவாகக் கொள்வழி உண்டா? இதைச் சற்று இங்கே ஆராயலாம்.

நாம் பேசும்போது சில சமயங்களில் வின எழுத்தை உபயோகிக்காமலேயே தொனி வேறுபாட்டால் வின வென்பதைக் குறிப்பிக்கிறோம். "ராமன் வந்தான்; கிருஷ்ணன் வந்தான்; கோபாலன் வந்தான' என்று வந்தவர்களை ஒருவர் சொல்கிறார். அப்போது, "முருகன்?" எனறு ஒருவர் கேட்கிறார். முருகன் என்ற சொல்லில் வினவைக் குறிக்கும் எழுத்து இல்லாவிட்டாலும், பேசுகிறவர்களுடைய குரல் வினவைப் புலப்படுத்துகிறது.

"பம்பாய் நெடுந்தூரத்தில் இருக்கிறதே. அங்கே போய் நீ வேலை பார்ப்பாய்?" என்று வரும் பேச்சிலே 'வேலை பார்ப்பாயா' என்ற பொருளில் 'வேலை பார்ப்பாய்' என்ற தொடர் வருகிறது. இப்படி வருவதைக் காகு என்றும் காகுசுரம் என்றும் வடமொழியாளர் கூறுவர்.

பெரியபுராணத்தில் ஓரிடத்தைப் பார்க்கலாம். சேக்கிழார் கூறும் அவையடக்கப் பாட்டு. "அருளின் இயல்பால் புரியும் திருத்தொண்டை அறிவதற்கரிய, தெளிவில்லாத நீர் இந்தப் புராணம் செய்யலாகுமா என்று கேட்டால், அச்சம் இல்லாத மெய்யாகிய மொழியை வான் நிழலாகிய அசரீரி கூறிய உண்மையின் வலிமையால் ஆகும் என்று சொல்வோம்" எனகிறார்.

"அருளின் நீர்மைத் திருத்தொண்டு அறிவரும்
தெருள்இல் நீர்இது செப்புதற் காம்எனின்
வெருளில் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய
பொருளின் ஆகும் எனப்புகல் வாம் அன்றே"

என்பது பாட்டு. "நீர் இது செப்புதற்கு ஆம்?" எனின், "ஆகும எனப புகல்வாம" எனகிறார். இங்கே "நீர் செப்புதற்கு ஆம்" என்பது "நீர் செப்புதற்கு ஆகுமா?" என்று வினப் பொருளில் வந்தது. ஆகுமா என்ற கேள்விக்கே பின்பு ஆகும் என்று விடை கூறுகிறார். "உமக்குத் தெளிவில்லையே; செப்புதற்கு ஆகுமா?" எனறு கேட்பவர் காரணத்தோடு கேட்க, "என தெளிவைக் கொண்டு நான புகலவில்லை. வான் நிழல்



கூறிய பொருளின் ஆற்றலால் செப்பல் ஆகும்" என்று காரணத்தோடு விடை பகர்வதாகப் பாட்டு அமைகிறது. இங்கே, "செப்புதற்கு ஆம்" என்றது காகு; தொனி வேறுபாட்டால் வினப் பொருளைத் தரும் தொடர்.

"புவிக்குன் பாதம் அதைநினை பவர்க்கும்
கால தரிசனை புலக்கண் கூடும்"

என்பதையும் காகுவாகக்கொண்டு, "அத்தகைய அன்பர்களுக்கும் காலன் முன் நிற்பானா? கால தரிசனை புலக்கண் கூடுமா?" என்று பொருள் கொண்டால், உம்மைக்கும் பொருள்கிடைக்கிறது. பாட்டுக்கும் பொருத்தமான பொருள் அமைகிறது.

"மாகத்தை முட்டி வரும்நெடுங் கூற்றன் வந்தால் என்முன்னே
தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய்"

என்ற வேண்டுகோளுக்கு இணங்கத் தன்னை நினைப்பவர்களுக்குக் கால தரிசனம் கிட்டாமல் மயில் வாகனக் கோல தரிசனம் காட்டும் பிரான் அல்லவா முருகன்?

---

## திருப்புகழமிர்தம் வாழ்த்து

நாவினுக் கமிர்தம் நல்குவர் உலகில்
நல்லுளம் படைத்த நற்பெரியார்
பூவியற் செவிக்கே அமிர்தமே வார்த்து
பொன்னுளம் தழைகவே சைவக்
காவியல் வளர்ப்பார் கோடியி லொருவ
ரவரெவர் கனதன மிகுத்த
கோவெனுங் கிருபா னந்தநல் வாரி
யென்பரே கோதிலா தவரே.

கோதிலா தவர்கள் கூறுவ துண்மை
குகதிரு முருகசே வடியைப்
பேதியா மனத்தா லுணர்ச்சியாற் றெளிவால்
பேணுநன் முறையொடு கற்பு
ஆதியா முறையை மதிதொறும் புகட்டும்
அரியநற் றிருப்புக ழமிர்தம்
நீதியாய் வயது இருபது நிறைந்து
நிகழ்வது மிருபதோ டொன்றே.

ஒன்றுடன் மூன்று நான்கையு முணர்த்தி
யுறுதுணை யுதவிடு மமிர்தம்
என்றுமே யுலகில் வாழ்கவே யினிதாய்
இயற்றிடு மேந்தலாம் வாரி
நன்றுற வோங்கி வாழ்கவே சைவம்
நற்றமிழ் நாடெலாம் வாழ்க
நன்றியாற் றமியேன் வாழ்த்தினேன் செந்தில்
நாதனும் அருள்செய மாதோ.

சி. சிவசுப்பிரமணிய பிள்ளை,
(மாஜி ஆசிரியர் & பிராஞ்சு போஸ்மோஸ்டர், புளியங்குளம்)

உ
ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றுள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 21 | துன்முகி ஆண்டு ஆடித் திங்கள் ஜூலை-1956 | இதழ் 4

## திருப்புகழ்

### திருச்செந்தூர்

பங்கமே வும்பிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறிப்

பஞ்சபா ணப்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்

தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கை மால் கொண்டிளைத் தயராதே

தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ அன்புவைத் தருள்வாயே

அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவேதான்

அஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே

திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ்சடா பஞ்சரத் துறுதோகை

சிந்தையே தென்றிசைத் தென்றல் வீசும் பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

தேவியின் திருவுள்ளத்தில் விளங்கும் பாலகரே! தென்திசையிலிருந்து தவழுகின்ற தென்றல் காற்று வீசுகின்ற பூம்பொழில்கள் சூழும் திருச்செந்தூர் என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள செந்தமிழ்க் கடவுளாக விளங்கும் பெருமிதம் உடையவரே! குற்றம் நிறைந்த பிறவியாகிய இருளிலும் கட்டுப்படுத்தும் ஆசையாகிய சுழலிலும் தடுமாற்றமுற்று, மன்மதனுடைய ஐந்து மலர்க்கணைகளும் பட்டு அதனால் நெஞ்சு புண்பட்டு, வஞ்சனையைச் செய்பவரும், நற்பண்பு இல்லாதவரும், ஆடம்பரமாக வாழ்பவரும் ஆகிய பொது மாதர்களுடைய தனங்கள் தழுவிக்கொள்வதனால் என் உடம்பில் பட, அதனால் ஐயமும் மயக்கமும் அடைந்து இளைப்புற்று அயர்ந்து போகாவண்ணம், தண்டையும் கிண்கிணியும் சூழ்ந்துள்ள திருவடிக் கமலங்களை அடியேனுக்கு அளித்து எளியேன்மீது தேவரீர் கருணைவைத்துத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**பங்கமேவும் பிறப்பந்தகாரம்:—**

பங்கம் – குறைவு. பிறப்பு பலப்பல குறைவுகளுடன் கூடியது. குறைவு இன்றி நிறைவுடன் கூடியவர் இறைவர் ஒருவரே. நாம் அனைவரும் குறைவுடன் கூடியே பிறந்திருக்கின்றோம். அறிவிருந்தால் அழகிராது; அழகிருந்தால் அறிவிராது; இரண்டும் இருந்தால் அடக்கம் இராது; அடக்கம் இருந்தால் அன்பிராது; அன்பிருந்தால் செல்வம் இராது; செல்வமிருந்தால் கருணையிராது; சிலருக்கு உடல் நலமிராது; மக்களிருந்தால் செல்வம் இராது; தனமிருந்தால் மனமிராது; மக்களிராது. இப்படியாக ஏதாவது குறைவு இருக்கும்.

இருள் பொருள்களை மறைக்கும். ஆணவ இருள் இருளினும் வலிமையுடையது. இருள் எல்லாவற்றையும் மறைக்குமேயன்றி தன்னை மறைக்காது; ஆணவம் தன்னையுங் காட்டாது மறைத்து மற்றவற்றையும் மறைத்துக் கொடுமை புரியும். எல்லா வகையான தீமைகட்கும் மூலகாரணம் ஆணவமலமேயாகும். அது ஆன்மாவுக்கு செம்புக்குக் களிம்பு போல் அநாதியே உண்டு. அதன் வலிமையைக் கெடுப்பதுவே பதிஞானமாகும்.

**பந்த பாசம்:—**

பந்தம்–கட்டு. மக்கள் மனைவி உறவு முதலியவர்கள் மீது ஆசை வைத்து அவர்கள் நலம் பொருட்டே பலப்பல முயற்சி செய்து மாந்தர் உழல்வர். மனைவி மீதுள்ள பாசத்தை விடுத்தவர் இயற்பகை முதலியோர். மக்கட் பாசத்தை விடுத்து வீடு பெற்றவர் சிறுத்தொண்டர். பாச நாசம் ஈசன் நேசத்தால் வரும்.

பஞ்சபாணம் :—

மன்மதன் ஆன்மாக்களை மயக்கி வேட்கைத்தீ மூளுமாறு ஐந்து பூங்கணைகளை விடுவான். அக் கணைகளால் அல்லல் படுவோர் பலர். முருகன் அருள் பெற்றோர் அக் கணைகளை வெல்வர்.

"மாரன் வெற்றிகொள் பூமுடிக் குழ
லார் வியப்புற நீடு மெய்த்தவர்
வாழ் திருத்தணி மாமலைப்பதி தம்பிரானே"

(ஏதுபுத்தி—திருப்புகழ்)

வஞ்சகப் பண்பி லாடம்பரப் பொது மாதர் :—

பண்பு என்பது ஒரு உயர்ந்த குணம். அறிவு மனிதனை உயர்த்தும். அந்த அறிவினும் பல்லாயிரம் மடங்கு உயர்ந்தது பண்பு. பண்பில்லாத அறிவுடைய மனிதனை மரத்திற்கு நிகராகக் கூறுகின்றார் திருவள்ளுவர்.

அரம்போலுங் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

ஆதலால் அறிவிலே உயர்ந்த அரசியல் தலைவர்கள் யாவரும் பண்பிலே உயர்ந்த காந்தியடிகட்கு மாணவர்களாகத் திகழ்கின்றார்கள். அறிவு மூளையை உறைவிடமாகக் கொண்டது. பண்பு உள்ளத்தை உறைவிடமாகக் கொண்டது.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

என்ற பொதுமறையை நோக்குக.

இத்தகைய பண்பு பொது மாதர் பலரிடம் இல்லை. ஆடம்பரமும் அதிகம் புரிவர்.

சங்கைமால் கொண்டு இளைத் தயராதே :—

சங்கை — சந்தேகம்

பொர்து மகளிர்பால் நட்பு கொள்வோர் அவள் வேறு ஒருவனைக் காதலிக்கின்றாளோ? என்று அடிக்கடி ஐயுறுவர்.

மாதவி என்ற கணிகை சிறந்த நெறியும் பண்பும் உடையவள். அவள் கலையில் ஈடுபட்ட கோவலன் அவளுடன் ஒன்றி வாழ்ந்தான். இந்திர விழா நிகழ்ந்த போது கடற்கரையில் படாம்மனையில் இருவரும் இனிது இன்புற்று உறைந்தார்கள். கானல்வரி என்ற பண்ணை அவள் வீணையில் இசைத்துப் பாடினாள். அவள் உள்ளம் வேறு பட்டனள் போலும் என்று ஐயுற்ற கோவலன் அவளை விட்டு அகன்றான். எனவே நல்லொழுக்கம் பூண்ட மாதவியையே கோவலன்



ஐயுற்றனன் என்றால், ஒழுக்கமில்லாத கணிகையரைக் காமுகர் ஐயுறுவதில் வியப்பு ஒன்றும் இல்லை தானே?

இனி ஐயத்துடன் மயக்கமும் அடைவர். காமத்தால் வெகுளியும், வெகுளியால் மயக்கமும் தோன்றும்.

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றின்
நாமங் கெடக்கெடும் நோய்.

முருகனுடைய திருவடித் தியானத்தால் இவைகள் நீங்கும்.

தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீகம்:—

முருகன் என்றும் மாறாத இளமை நலம் உடையவர். தன்னை வழிபடும் அடியார்க்கு "மணங்கமழ் தெய்வத்து இளநலங்காட்டி" யருள்புரிவார். இளம்பூரணன் ஆதலின் அவர் திருவடியில் தண்டையும் கிண்கிணியும் இலகுகின்றன.

"...........................அணிமணித் தண்டையார்க்கும்
செழுமலர் அடியுங் கண்டான்; அவன்தவம் செப்பற்பாற்றோ"

என்ற திருவாக்கையும் நோக்குக. போர்க்களத்தில் தாரகன் கண்ட காட்சியிது.

அரக்கன் ப்ரதாபங் கெடுத்து:—

சூரபன்மன் – ஆணவமலம். ஆணவமலம் ஒருபோதும் அழியாது. "உள்ளது சிதையாது; இல்லது தோன்றாது" என்பது சற்காரிய வாதம். ஆணவமலம் வலிகுன்றி அடங்கி நிற்கும். ஆகவே ஆணவமலமாகிய சூரன் தனது வலிமை குன்றி மயிலும் சேவலுமாகி நன்னெறி நின்றான். எனவே முருகன் சூரனைக் கொல்லவில்லை. இதனையே கச்சியப்பரும் அழகாகக் கூறுகின்றார்.

"அந்தமில் அவுணர் சேனை அடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள்"

சேஞ்சடா பஞ்சரத்துறுதோகை:—

சிவந்த சடையாகிய கூட்டினுள் உறைகின்ற கங்கை. பஞ்சரம் - கூடு. 'எண்குணபஞ்சரனே' என்று கந்தரநுபூதியிலும் கூறியிருக்கின்றார்.

சிந்தையே:—

கங்கையின் திருவுள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்றவரே! என்பது பொருள்.

'சிந்தையாய் நின்ற சிவனே போற்றி'

என அப்பரும் கூறியிருக்கிறார்.

# கற்பு

## நாகேஸ்வரி

பாடலிபுரத்தை யாளுகின்ற பார்த்திபனுடைய மகள் நாகேஸ்வரி. மன்னனுக்கு ஒரே மகள். வேறு ஆண் குழந்தை பிறக்கவில்லை. தவமிருந்து பிறந்த தனிப் புதல்வி. அதனால் அருமையிலும் அருமையாக வளர்க்கப் பெற்ருள். அரசன் மகளாகிய அவளுக்கு என்ன குறை? சிறந்த ஆடை அணி கலன்கள்; செயற்கை எழிலுடன் இயற்கை எழிலும் இசைந் திருந்தது. அவள் முகத்தில் எப்போதும் புன்னகை தவழ்ந்து கொண்டிருக்கும். சந்திரனைச் சுற்றி கருமேகம் கவிழ்ந்திருப்பது போல் முகத்தினைச் சூழ்ந்து கரிய கூந்தல் பளபள என்று சுருண்டு விளங்கும்.

அவள் இளமையிலிருந்து வாணிதேவியை வணங்கி வந் தாள். அதனால் கல்வியறிவு அபரிமிதமாக அமைந்தது. இசை யறிவும் பெற்றனள். வீணையை எடுத்து வாசித்தால் கலை மடந்தைபோல் காட்சி தருவாள். அவளுடைய சாரீரத்தில் இனிமை குடியிருந்தது. சிலருக்குச் சாரீர வளம் இருந்தால் சரீர வளம் இராது. மற்றும் சிலருக்குச் சரீரவளமிருந்தால் சாரீரம் இராது. நமது நாகேஸ்வரிக்குச் சரீரம் சாரீரம் என்ற இரண்டும் வளமையாக அமைந்திருந்தன.

அத்திருவாட்டியைப் பெற்ற மன்னனுக்கு நாள் செல்லச் செல்ல கவலை வளர்ந்தது. அழகு அறிவு அடக்கம் அமைதி இசை நடனம் முதலிய நலன்கள் எல்லாம் அமைந்த இச்செல்வக் குமாரிக்கு ஏற்ற கணவன் அமையவேண்டுமே யென்பதுதான்

---

"தெருளிடத் தடியார் சிந்தையுள் புகுந்த
செல்வமே சிவபெருமானே"

என்கின்ருர் மணிவாசகர்.

சேந்தமிழ்ப் பெருமாளே :—

தமிழும் முருகனும் ஒன்றே என்பதை எனது 'செந்தமிழ் இன்பம்' என்ற நூலில் காண்க. தமிழின் பயனுக, தமிழை விரித்த தயாபரனுக, தமிழ் மாலை தரித்த தகவோனுக விளங்குபவன் முருகன்.

### கருத்துரை

இந்திரனுக்கு அருளிய செந்திற் கடவுளே! பிறவிச் சுழலில் புகாவண்ணம் எளியேனுக்கு திருவடியைத் தருவீர்.



அவர் கவலை. பெண் பெற்றோர்க்குத் தங்கம் போன்ற நற் குணம் அமைந்த மருமகன் அமைந்துவிட்டால் அதைப்போன்ற மகிழ்ச்சி வேறு இருக்கமுடியாதுதானே? துர்க்குணம் நிறைந்த அசட்டு மருமகன் வந்துவிட்டால் பெருங் கவலையைத் தருமல் லவா? மகள் வளர வளர மன்னவன் கவலையும் வளர்ந்தது. அநேக அரசகுமாரர்கட்குக் கல்வியிருந்தால் அடக்கம் இராது; அடக்கம் இருந்தால் கல்வியிராது; அறிவு இருந்தால் அழகு இராது. அழகு இருந்தால் அறிவு இராது. இப்படி ஒன்றிருந் தால் ஒன்றிராது. அதனால் அரசன் மனம் அல்லலுற்றது. வாணி தேவிதான் வழிவிட வேண்டும் என்று ஒரு சமயம் ஆறுதலும் அடைவான்.

சத்திய உலகிலே வெண்டாமரையிலே வாணிதேவி வீற்றி ருந்து வீணுகானம் புரிந்துகொண்டிருந்தாள். திருமகளாகிய இலக்குமிதேவி அங்கு வந்தனள். கலைமகள் எழுந்து இலக்குமி யைத் தொழுதாள்.

இலக்குமி: "அம்மா! வாழி வாழி" என்ன உனக்கு அலுவல் அதிகம்போலும். வைகுந்தத்திற்கு வருவதே யில்லையே? என்ன காரணம்? மாமியாரை மருமகள் மதிக்கின்ற வழக்கம் மண்ணுலகத்தில்தான் வர வர மங்குகின்றது. விண்ணுலகத்திலுமா இப்படி? எல்லாம் நலந்தானே"

வாணிதேவி: "மாமீ! வணக்கம்; வரக்கூடாது என்ற எண்ணமில்லை. மன்னிக்கவேணும். அங்கங்கே உள்ள அடியவர் கட்கு அருள்புரிவதும், அவர்கள் நாவில் இருந்து பாடுவதும், அதன் மூலம் உலகிற்கு நன்மை புரிவதும் ஆகிய அலுவல்கள் அதிகம். எங்கே இப்படி காற்றுவாக்கிலே வந்துவிட்டீர்?"

இலக்குமி: "நாமகளே! ஏன் நான் இப்படி வரக்கூடாதோ? மண்ணுலகில் உன்னைத்தான் அநேகர் மதிக்கின்ருர்கள் என்று எண்ணுதே. எனக்குத்தான் அதிகம் மதிப்பு. நீ யாரிடம் உறைகின்றனையோ அந்தப் புலவர்கள் யாவரும் என்னை நாடி என் அடியார்களாகிய தனவந்தரிடம் வந்து பாடிப் பரிசு பெறுகின்ருர்கள்."

கலைமகள்: "மாமீ! வீண் பெருமை பேசவேண்டாம். கல்வி யறிவில்லாதவனை மனிதன் என்று உலகம் மதிக்காது.

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

என்ற வள்ளுவர் வாக்கையும் உன்னுக.

அன்றியும் எனது அருள் பெருதவனுக்கு அறிவு இடை யாது. அறிவில்லாதவனிடம் பொருளிருக்குமாயின் அஃது உலகிற்கு கேடுபயக்குமே யன்றி நன்மை பயக்காது.

"நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு"

என்ற நல்வாக்கையுங் காண்க.

ஒரு மனிதனுக்குச் செல்வம் தேவைதான். ஆனால் அறிவுச் செல்வத்தினும் பொருட் செல்வம் சிறந்ததாக ஆகாது. எனது அடியார்கள் தங்கள் அறிவு நலத்தைப் பொருளுடையாரிடம் வழங்கி அதற்கு ஈடாகப் பொருளைப் பரிசில் பெறுகின்றார்கள். தாங்கள் கீழ் மக்களிடமே பெரும்பாலும் வாழ்கின்றீர். மேன் மக்கள் தங்களை மதிப்பதில்லை. "சிறியரே மதிக்கு மிந்த செல்வம் வந்து உற்ற காலை வறிய புன் செருக்கு மூடி வாயுள்ளோர் மூகராவார்"; "பெருத்திடு செல்வமாம் பிணிவந்துற்றிடில் உருத் தெரியாமலே ஒளி மழுக்கிடும்" என்று அறநெறிப் பாடல்களையெல்லாம் தாங்கள் கேட்டதில்லையா? ஆகவே கல்வி நலம் உடையான்பால் தாங்கள் இருந்தால் மட்டுமே பெருமை பெறமுடியும்."

திருமகள்: "மருமகளே! ம்...உனக்கு வாய் வளம் இருக்கின்றது. உன்னோடு பேச நம்மால் ஆகாது. செயலில் வேண்டுமானால் காட்டுகின்றேன். உனது வாசம் அணுவளவு மில்லாத ஒருவனுக்கு நான் செல்வத்தை வழங்கிப் பெருமைப் படுத்துகின்றேன் பார். உன்னை நம்பிப் படித்த எத்தனைப் புலவர்கள் அரை வயிற்றுக்கும் உப்பிட்ட கூழின்றி தவியாகத் தவிக்கின்றார்கள்! சோமனுக்கு இருபத்தேழு தையல்கள்; புலவர்கள் உடுக்கின்ற சோமனில் எண்ணில்லாத தையல்கள். கஞ்சிக்குக் காரணமிட்டுப் பஞ்சாகப் பறக்கின்றார்கள். இந்த லட்சணத்தில் நீ ஜம்பம் பேசுகின்றாய். செல்வம் உள்ளவரையே உலகம் மதிக்கும்; வறியவனை மனைவிகூட மதிக்கமாட்டாள். செல்வம் உடையவனை எல்லோரும் தேடி வருகின்றார்கள்."

கலைமகள்: "மாமீ! சிறிது சிந்தித்துப் பேசுங்கள். பலர் தேடிவருவதனாலேயே ஒரு பொருள் பெருமையுடையதென்று முடிவு கட்டக்கூடாது. கள் இருந்த இடத்தில் இருந்தே விலையாகின்றது. அதனைத் தேடிப் பலர் அது இருக்குமிடம் போய் குடிக்கின்றார்கள். அதனால் கள்ளை உயர்ந்த பொருள் என்று உலகம் மதிக்கின்றதா? பால் தயிர் வீதி வீதியாக நமது வீடு தேடி விலைப்படுகின்றன. அதனால் பால் தயிருக்குப் பெருமை குறைவு என்று எவனாவது கூறுவானோ?

வீணாக உமக்கும் எனக்கும் வாதம் வேண்டாம். தாங்கள் கூறியபடியே என்னுடைய அநுக்கிரகம் பெறாத ஒரு முழு மூடனிடம் செல்வத்தைத் தந்து அவனுக்குப் பெருமை கொடுத்துத் தங்கள் சொல்லை நிலைநாட்டுவீராக"



திருமகள்: "அப்படியே செய்வேன்" என்று கூறிவிட்டு அகன்றனள். பாடலிபுரத்திற்கு அருகில் ஒரு சிறுமலை; மலையடிவாரத்தில் ஒரு சிறு குடிசையில் கல்வியறிவுசிறிதுமில்லாத ஒரு இருளன் இருந்தான். அவன் எலிபிடித்துச் சுட்டுத் தின்பான். முழுமூடன். அவனுடைய வயிற்றைக் கிறிப் பார்த்தாலும் அதில் ஒரு எழுத்து வாசனையைக் காண முடியாது. அவனுடைய அடுப்பில் தேவலோக மாணிக்கங்களைக் கொண்டுவந்து கொட்டிவிட்டாள் திருமகள்.

காலையிலே எலிபிடித்துக்கொண்டு வந்த இருளன் அதனைச் சுடுவதற்கென்று அடுப்பினிடம் போனான். மாணிக்கங்களைக் கண்டு திகைத்தான். அடுப்பை யார் மூட்டியது? என்று ஐயுற்றான். அம் மாணிக்கங்கள் ஒளிவிட்டு மின்னுகின்றன.

"அடகடவுளே! இது நெருப்பல்ல; கண்ணாடிக்கல்லுகள். நான் எலியைத் தேடிக்கொண்டு மலையெல்லாம் அலைந்தேனே? பாழாய்ப்போன எலி எங்கிருந்தோ கண்ணாடிகளைக் கொண்டு வந்து போட்டிருக்கின்றது? வளையையும் காணோம். பொல்லாத எலி" என்று வைதுக்கொண்டே சாம்பலுடன் சேர்த்து அத் தேவலோக மாணிக்கங்களை ஒருபுறம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, அடுப்பை மூட்டி எலியைச் சுட்டுத் தின்றான். அறிவு அணுவளவும் இல்லாத அவனுக்கு மாணிக்கத்தின் மகிமை தெரியவில்லை.

மறுநாளும் அடுப்பில் ஒருகூடை மாணிக்கத்தைத் திருமகள் கொட்டிவைத்தாள். இருளன் மனஞ் சலித்து, "இந்தத் திருட்டு எலி இந்தக் கண்ணாடிகளை எங்கிருந்து கொண்டுவந்து கொட்டுகின்றதோ தெரியவில்லையே. சனியன் பிடித்த எலி; வம்பு பண்ணுகின்றதே" என்று வெறுத்து அவற்றையும் பழைய சாம்பல் குவியலுடன் குவித்து ஒதுக்கினான்.

இவ்வாறு முப்பது நாள் முப்பது கூடை மாணிக்கத்தை மகாலட்சுமி தாராளமாகத் தந்தாள். தந்து என்ன பயன்? பேடி கையில் பிடித்த வாள் போல், கைம் பெண்ணின் அழகு போல் அவைகள் பயனற்றுக் கிடந்தன.

பாடலிபுரத்தில் ஒரு செட்டியார் இருந்தார். அவர் ஆமணக்கு முத்துக்களைப் பொதிமாட்டின்மீது ஏற்றிக் கிராமங்களில் கொண்டுபோய் விற்பார்; வறியவர். அவர் வழக்கம் போலே பொதிமாட்டின்மீது ஆமணக்குக்கொட்டைமுத்துக்களை ஏற்றிக்கொண்டு இருளன் இருக்கின்ற குடிசைவழியேவந்தார்.

"அடேய்! இருளனே! சுருட்டுக்கு நெருப்பு கொண்டுவா" என்றார் செட்டியார்.

இருளன்: "செட்டியாரே! நான் எலியறுத்துக்கொண்டிருக் கின்றேன். நீரே போய் அடுப்பில் நெருப்பு இருக்கின்றது. எடுத்துக்கொள்ளும்" என்றான். செட்டியார் உள்ளே சென்றார். அவரால் தன் கண்களை நம்பவே முடியவில்லை. கண்ணை விழித்து விழித்துப் பன்முறை பார்த்தார். மாணிக்கங்கள் நட்சத்திரக் குவியல்போல் ஒளிவிட்டு மின்னிக்கொண்டிருந்தன.

"ஆ! ஆ! இது என்ன அதிசயம்! இவைகள் நமது வீட்டி லிருந்தால் எத்தனை இரும்புப் பெட்டிகள் வேண்டும்? இந்த இருளன் குடிசையில் சாம்பலுடன் சோம்பலுற்றுக் கிடக்கின் றனவே. நான் என்ன கனவு காண்கின்றேனா? இல்லை; நனவு தான். இதில் ஒன்று கிடைத்தால் நமது ஏழு தலைமுறைக்கும் தரித்திரம் இராது. ஆனால் இவனைக் கேளாமல் எடுப்பது பிழை. களவு கனவிலும் ஆகாது" என்று அவர் கருதினார்.

"அப்பா! இருளனே! இந்தக் கற்களில் ஒன்று எனக்குத் தருகின்றாயா?" என்று இனிய குரலில் கேட்டார் செட்டியார். இருளன் சிரித்தான். "ஐயா! இதற்கென்ன ஐயா இத்தனைக் கேள்வி? பாழாய்ப் போன எலி கொண்டு வந்து கொட்டுகின்ற தையா! ஒன்றென்ன? எல்லாவற்றையுமே கொண்டுபோம். இடம் காலியாகட்டும்" என்று அலட்சியமாகக் கூறினான்.

செட்டியாருக்கு அளவற்ற ஆனந்தம்; துள்ளிக் குதித்தார். வெளியே ஓடி பொதி மாட்டின் மீதிருந்த மூட்டையைக் கொணர்ந்து அதில் உள்ள ஆமணக்கு முத்துக்களை அங்கே கொட்டிவிட்டு, மாணிக்கங்களைக் கோணியில் போட்டுக் கட்டிக் கொண்டு புறப்பட்டார். இருளனுக்கும் மட்டற்ற மகிழ்ச்சி. கண்ணுடிக் கற்கள் காலியானது ஒரு மகிழ்ச்சி, ஆமணக்கு முத்து கிடைத்தது மறுமகிழ்ச்சி. "செட்டியாருக்கும் புத்திக் கும் சேனை தூரம். கண்ணுடிகளை எடுத்துக் கொண்டு ஆமணக்கு முத்துக்களை நமக்குத் தந்து விட்டார். இவைகளை விற்றால் 10, 15 ரூபாயாகும். சோளம் வாங்கினால் 4, 5 மாதங் கட்குக் கவலையிருக்காது" என்று எண்ணி அவன் கூத்தாடினான்.

செட்டியாருக்கு ஏற்பட்ட சந்தோஷத்தால் தலை வெடித்து விடுவது போன்ற ஒரு உணர்ச்சி. மனதில் ஏதேதோ எண்ண அலைகள் எண்ணற்ற வேகத்தில் எழுந்து வீசின. "இவற்றை வைத்து எப்படிக் காப்பாற்றுவது? எங்கே விற்பது? யார் வாங்குவார்கள்?" என்றெல்லாம் எண்ணினார்.

வீட்டிலேகொண்டுபோய் ஒருவரும் அறியாவண்ணம் பத்து மாணிக்கத்தை வெளியே வைத்துக்கொண்டு மற்றவற்றை ஒரு பானையிலிட்டு வீட்டிற்குள் புதைத்துவைத்துவிட்டார்.

மாலையில் இரண்டு மாணிக்கங்களைக் கொண்டுபோய் பாடலி புரத்தை யாளுகின்ற மன்னன் முன்னர் வைத்து வணங்கி



னின்றார். மன்னர், "என்ன சேதி?" என்று வினவினர். "இதனை விற்கவந்தேன்" என்றார் செட்டியார். மன்னன் இரத்தினத்தை மதிப்பிட்டுச் சொல்லும் அலுவலரை யழைத்து மதிப்பிடுமாறு கட்டளையிட்டார். பரீட்சகர் பல முறை மாணிக் கங்களை நோக்கி, "மன்னர்பெருமானே! இவை பூலோக ரத்தினங் கள் அல்ல; தேவலோக மாணிக்கங்கள். இவை மதிப்புக்கு அடங்காதவை. குறைந்தபட்சமாகத் தந்தால் ஒரு மாணிக்கத் திற்குப் பத்துலட்சம் பொன் தரலாம்" என்றார்.

மன்னர் மந்திரியை அழைத்து, "மந்திரீ! இந்த இரு மாணிக்கங்களும் இருபது லட்சம் பெறுமதியுள்ளவையாம்; இருபது லட்சம் பெறுமானமுள்ள மாணிக்கங்களை விற்கின்ற இந்த வியாபாரி அதற்குத் தகுந்த ஆடையும் மதிப்பும் இல்லா மல் இருக்கின்றார். எனக்கு இவர் மீது சந்தேகம் ஏற்படு கின்றது. இந்த மாணிக்கங்கள் இவருக்கு ஏது? எப்படி வந்தன; இவர் எங்காவது களவு செய்தனரா? அல்லது கள்வர் களவு செய்து இவர்பால் விற்குமாறு தந்தனரா? இவரைக் கேட்டு உண்மை யுணர்ந்து ஏற்ற தண்டனை தருவாயாக" என்று கட்டளையிட்டனர்.

செட்டியார் இடியைக் கேட்ட நாகம் போல் நடுங்கினார். "தெய்வமே! என் தலையில் கல் விழுந்தது. என்னசொல்லி தப்பிப்பேன்? சிறிது நேரத்திற்கு முன் இன்பம்; இப்போது துன்பம். அரச கோபத்திற்கு ஆளாகக் கூடாதே" என்று எண்ணினார்.

அமைச்சர், "செட்டியாரே! இம் மாணிக்கம் ஏது? உண் மையை உரை" என்று வினவினர்.

"அமைச்சர் பெருமானே! நேற்று என் வீட்டிற்கு நேபாள தேசத்து அரச குமாரர் வந்து தங்கினர். அவர் தந்தையுடன் சிறிது வருத்தமுற்று வந்தாராம். அவர் தன் வழிச் செலவுக் காக இதை விற்குமாறு என்பால் தந்தார். இதனை மன்னரே வாங்குந் தகுதியினர் என்று யான் இங்கு கொணர்ந்தேன்" என்றார் செட்டியார்.

இந்த வசனங்களை மன்னவர் கேட்டார். "மந்திரீ! இது பொருந்தும். மன்னன் மகன் இவற்றைக் கொணர்ந்தான் என் பது ஒப்புக்கொள்ளத் தக்கதே. வடக்கே யுள்ள நேபாள ராஜாக்களிடம் இதுபோன்ற ஒப்பற்ற மாணிக்கங்கள் இருப்பது இயல்பே. எனக்கு ஒன்று தோன்றுகின்றது. ஒரு மன்ன ருடைய மகன் தந்தைபால் வருத்தமுற்று வந்திருப்பாரானல் நாம் மாணிக்கத்தின் விலையைத் தந்து அனுப்புவது முறை யன்று. அப்படிச் செய்தால் தந்தைபால் மைந்தன் சேர மார்க்க மிராது. நாம் மன்னர் மகனை அழைத்து, அவருக்கு அரச

இருளன்: "செட்டியாரே! நான் எலியறுத்துக்கொண்டிருக்கின்றேன். நீரே போய் அடுப்பில் நெருப்பு இருக்கின்றது. எடுத்துக்கொள்ளும்" என்றான். செட்டியார் உள்ளே சென்றார். அவரால் தன் கண்களை நம்பவே முடியவில்லை. கண்ணை விழித்து விழித்துப் பன்முறை பார்த்தார். மாணிக்கங்கள் நட்சத்திரக் குவியல்போல் ஒளிவிட்டு மின்னிக்கொண்டிருந்தன.

"ஆ! ஆ! இது என்ன அதிசயம்! இவைகள் நமது வீட்டிலிருந்தால் எத்தனை இரும்புப் பெட்டிகள் வேண்டும்? இந்த இருளன் குடிசையில் சாம்பலுடன் சோம்பலுற்றுக் கிடக்கின்றனவே. நான் என்ன கனவு காண்கின்றேனா? இல்லை; நனவு தான். இதில் ஒன்று கிடைத்தால் நமது ஏழு தலைமுறைக்கும் தரித்திரம் இராது. ஆனால் இவனைக் கேளாமல் எடுப்பது பிழை. களவு கனவிலும் ஆகாது" என்று அவர் கருதினார்.

"அப்பா! இருளனே! இந்தக் கற்களில் ஒன்று எனக்குத் தருகின்றாயா?" என்று இனிய குரலில் கேட்டார் செட்டியார். இருளன் சிரித்தான். "ஐயா! இதற்கென்ன ஐயா இத்தனைக் கேள்வி? பாழாய்ப் போன எலி கொண்டு வந்து கொட்டுகின்றதையா! ஒன்றென்ன? எல்லாவற்றையுமே கொண்டுபோம். இடம் காலியாகட்டும்" என்று அலட்சியமாகக் கூறினான்.

செட்டியாருக்கு அளவற்ற ஆனந்தம்; துள்ளிக் குதித்தார். வெளியே ஓடி பொதி மாட்டின் மீதிருந்த மூட்டையைக் கொணர்ந்து அதில் உள்ள ஆமணக்கு முத்துக்களை அங்கே கொட்டிவிட்டு, மாணிக்கங்களைக் கோணியில் போட்டுக் கட்டிக் கொண்டு புறப்பட்டார். இருளனுக்கும் மட்டற்ற மகிழ்ச்சி. கண்ணாடிக் கற்கள் காலியானது ஒரு மகிழ்ச்சி, ஆமணக்கு முத்து கிடைத்தது மறுமகிழ்ச்சி. "செட்டியாருக்கும் புத்திக்கும் சேனை தூரம். கண்ணாடிகளை எடுத்துக் கொண்டு ஆமணக்கு முத்துக்களை நமக்குத் தந்து விட்டார். இவைகளை விற்றால் 10, 15 ரூபாயாகும். சோளம் வாங்கினால் 4, 5 மாதங்களுக்குக் கவலையிருக்காது" என்று எண்ணி அவன் கூத்தாடினான்.

செட்டியாருக்கு ஏற்பட்ட சந்தோஷத்தால் தலை வெடித்து விடுவது போன்ற ஒரு உணர்ச்சி. மனதில் ஏதேதோ எண்ண அலைகள் எண்ணற்ற வேகத்தில் எழுந்து வீசின. "இவற்றை வைத்து எப்படிக் காப்பாற்றுவது? எங்கே விற்பது? யார் வாங்குவார்கள்?" என்றெல்லாம் எண்ணினார்.

வீட்டிலேகொண்டுபோய் ஒருவரும் அறியாவண்ணம் பத்து மாணிக்கத்தை வெளியே வைத்துக்கொண்டு மற்றவற்றை ஒரு பானையிலிட்டு வீட்டிற்குள் புதைத்துவைத்துவிட்டார்.

மாலையில் இரண்டு மாணிக்கங்களைக் கொண்டுபோய் பாடலிபுரத்தை யாளுகின்ற மன்னன் முன்னர் வைத்து வணங்கி



இன்றேன். உன் சம்மதம் யாது?" என்று கேட்டார். மன்னவன் மனைவி, "மிக்க சந்தோஷம்; இதுபோன்ற அமைதியுடைய அரசகுமாரனைக் காண்பது அரிது. தங்களுக்கு எது சம்மதமோ அது எனக்கும் சம்மதம். தங்களுக்குத் தெரியாத ஆலோசனை என்ன இருக்கின்றது. அப்படியே செய்யுங்கள். குழந்தையையும் கேட்டு அதன் சம்மதத்தையறியுங்கள்" என்றாள்.

மன்னவர் நாகேஸ்வரி வசிக்கின்ற உட்புறத்துள்ள சிங்கார மாளிகைக்கு இராஜேந்திரசேகரனை அழைத்துச் சென்றார். அவன் அந்தச் சலவைக் கல்லின்மீது கால் வைக்கக் கூசி தத்தடியிட்டு நடந்தான். மன்னர் ஏன் அப்படி நடக்கின்றீர்? தங்கள் மெல்லியபாதம் வருந்துகின்றதோ? கொஞ்சம் பஞ்சை ஒட்டிக்கொள்ளுங்கள்" என்றார்.

"அம்மா! மகளே! என் தவக்கொழுந்தே! இவர் நேபாள தேசத்து இளவரசர். இவர் பேர் இராஜேந்திர சேகரர். ஆழ்ந்த அறிவும் அடக்கமும் சாந்தமும் உடையவர். இவரை வணங்கு" என்றார். நாகேஸ்வரி வந்து நாணத்துடன் இருளனை வணங்கி ஒரு புறம் பூங்கொடி போல் ஒதுங்கி நின்றாள். இருளன் அவளை நிமிர்ந்தே பார்த்தானில்லை. அவனுக்கு ஒரே நடுக்கம். மன்னர் "இவர் பெரிய உள்ளம் படைத்தவர். தேவரம்பை போல் நிற்கின்ற செல்வக் குமாரியைக் கண்டு இவருடைய மனதிலே ஒரு மாறுபாடும் வரவில்லை" என்று எண்ணினார். இலட்சுமி கடாக்ஷம் இருப்பதனால் நாகேஸ்வரி அவனை மணந்துகொள்ள இசைந்தாள்.

திருமணநாள் நிச்சயிக்கப்பட்டது. மன்னருடைய அரண்மனையை வெகு சிறப்பாக அலங்கரித்தார்கள். மன்னர் இருளனைப் பார்த்துத் "திருமணத்திற்குத் தங்கள் தந்தையாரை அழைக்கவேணும். அவருடைய திருநாமம் யாதோ?" என்று வினவினார். மன்னர் என்ன சொல்லுகின்றார் என்பதனையறியாத அந்த முழு மூடன் இப்படிக் குறுக்கே தலையசைத்தான். "தந்தையாரை அழைப்பதில் தங்களுக்கு விருப்பமில்லையாயின் நான் தங்கள் கருத்துக்கு மாறாக நடவேன்" என்றார் மன்னர்.

அரண்மனைவாசம் சிறைவாசம்போல் இருந்தது இருளனுக்கு; "செட்டியார் நம்மை இந்த சங்கடத்திற்கு ஆளாக்கி விட்டாரே! இவர்கள் என்னென்னமோ போடுகின்றார்கள். ஒன்றாவது சுவைக்கவில்லையே. எலியைச் சுட்டுத் தின்ன இவர்களுக்குத் தெரியாதுபோலிருக்கின்றது. இந்த வில்லங்கத்தை விட்டு வெளிப்படுவதற்கு வழி என்ன? இந்தப் பெண் மினுக்கட்டாம் பூச்சிப்போல் இருக்கின்றாளே. நம்மை என்ன செய்வாளோ?" என்று எண்ணி அஞ்சினான். எங்கும் பாராவினர் உருவிய வாளுடன் இருப்பதைக் கண்டு மேலும் பயந்தான்.

தொடை நடுங்குதையா'' என்றான். அவனை இலக்குமி கருணை யுடன் நோக்குவதனால் ராஜ பேட்டியும் ராஜ வரிசையும் தேடி வருகின்றன.

செட்டியார் அவனுக்கு தைரியமூட்டி அழைத்துக்கொண்டு வீட்டையடைந்தார். நாவிதனை யழைத்து காடு முளைத்தால் போல் உள்ள தலைமயிரை வெட்டி ஒழுங்கு செய்வித்தார். ஏகாலியிடம்போய் பத்து ரூபாய் கொடுத்து உயர்ந்த உடுப்பு வாடகைக்கு வாங்கிவந்தார். இருளனை ராஜ குமாரனைப்போல் அலங்கரித்தார். கரித்துணி போன்ற கந்தலை யுடுத்த அவன் இடுப்பு பட்டு உடுத்தது. எல்லாம் இலக்குமியின் கடாக்ஷம். இருளன், "ஐயா! இது என்ன ஐயா வேஷம்? எனக்கு ஏனையா இந்தக் கோலம்? எங்க ஜாதிக்கு இதெல்லாம் அடுக்குமா?'' என்றான். செட்டியார், "ஏய்! சொன்னபடி கேட்கவேணும். இல்லையேல் உதைபட்டுச் சாவாய். ஜாக்கிரதை'' என்று அதட்டினார்.

மறுநாள் காலை மன்னவன் அனுப்ப மேளம் தாளம் பல்லக்கு குடை வெண்சாமரம் முதலிய அரச விருதுகள் யாவும் செட்டியாருடைய வீட்டுக்கு முன் வந்து நின்றன. இவற்றைக் கண்டவுடனே செட்டியாருக்கும் கவலை. "இது ஏது விபரீதம். இந்த இருளன் பல்லக்கில் ஒழுங்காக ஏறி இருப்பானா? எனை யாளும் ஈசன்செயல். ஒன்றை நினைக்க அது ஒழிந்திட்டு ஒன்றா கின்றது'' என்று கருதினார்.

உள்ளே சென்று, "அப்பா! இருளனே! ராஜா பல்லக்கு அனுப்பியிருக்கின்றார். அதன் மேல் ஏறு. அங்கு போய் ஒரு பேச்சும் பேசாதே. என்ன கேட்டாலும் தலையைமட்டும் அசைத்துவிடு. இல்லையேல் உன் தலை போய்விடும். எச்சரிக்கை''என்று அச்சுறுத்தினார். இருளன், "ஐயா! என்ன ஐயா! அநியாயம். நான் பல்லக்கில் ஏறலாமா? நீங்கள் ஏறிக் கொள்ளும். நான் பல்லக்குத் தூக்குகின்றேன். ஈனஜாதிப் பயல் நான் பல்லக்கில் ஏறினால் உலகஞ் சிரிக்குமையா'' என்றான். செட்டியார் அவனை அதட்டி மெல்லப் பல்லக்கில் ஏற்றினார். "பம் பம்'' என்று சங்கங்கள் முழங்க, வெண்சாமரம் இரட்ட, மேள தாளத்துடன் அவனைப் பல்லக்கில் சுமந்து கொண்டுபோய் அரசவையிற் சேர்த்தார்கள்.

அரசவைசென்று இருளன் பல்லக்கைவிட்டு இறங்கினான். மன்னவன் எழுந்து வணங்கினார். இருளன் நடுக்கத்துடன் சென்றான். ஒரு சிறந்த ஆசனத்தில் அவனை அரசன் அமர்த் தினார். வெல்வெட்டுப் பட்டு தைத்த உயர்ந்த ஆசனத்தில் அவன் பரம சங்கடத்துடன் அமர்ந்தான்.

மன்னர்: "தாங்கள் நேபாள தேசத்து மன்னர் குமாரரோ?''

இருளன்: ஆம் என்ற குறிப்பிலே தலையை அசைத்தான்.

மன்னர்: நல்லது. "தந்தையாருடன் மனவருத்தத்துடன்
வந்திரோ"

இருளன்: அதற்கும் தலையை அசைத்தான்.

மன்னன்: "அந்த மாணிக்கங்களைத் தாங்கள் தான் தந்து
அனுப்பினீரோ?

இருளன்: அதற்கும் சும்மா தலையை அசைத்தான்.

மன்னன்: "தங்கள் திருநாமம்யாதோ?" என்றார். செட்டியார்
அருகில் வந்து மன்னரை வணங்கி "அரசகுமாரர் தங்களிடம்
கொஞ்சம் வெட்கத்தால் ஒன்றும் பேசமாட்டாதுஇருக்கின்றார்.
அவர் பேர் **இராஜேந்திர சேகரர்**" என்றார்.

மன்னர் மந்திரியை நோக்கி, "மந்திரியாரே! இந்த அரச
குமாரர் அடக்கமே ஒரு வடிவாகத் திகழ்கின்றார். ஆ! இத்
தகைய உத்தம குணம் பொருந்திய உத்தமரைக் காண்பது
அரிது. இவர் முகத்தில் சிறந்த களை இருக்கின்றது. நமது
செல்வப் புதல்வி நாகேஸ்வரியை இவருக்குத் திருமணம்
புரிந்துவைத்து இத் திருமகனை மருமகனாகப் பெறுவதுடன்
பட்டாபிஷேகமும் இவருக்கே செய்யலாம் என்று நான் கருது
கின்றேன். உனது சம்மதம் யாது?" என்று கேட்டார்.
இலக்குமிதேவியின் அநுக்கிரகம் ராஜ சம்பத்து தேடிவந்து
அவன் காலடியில் விழுகின்றது. இவற்றைக் கேட்ட செட்டி
யார் மனம் நடுங்கியது. தலை சுற்றியது. "விபரீதமாக முடிந்து
விட்டது. இருளன் என்று இப்போது சொன்னால் என் தலை
போகுமே. பார்த்துவிட்டு அனுப்பிவிடுவார் என்று எண்ணி
னேனே. மன்னவர் மகளைத் தருவதாகத் திட்டமிடுகின்றாரே.
பின்னர் இருளன் என்று தெரிந்துவிட்டால் என்ன விபரீதம்
விளையுமோ? தெய்வமே நான் நிரபராதி. என்னை நீர்தான்
காப்பாற்றவேண்டும்" என்று கதியும் மதியுங் கலங்கினின்றார்.

மன்னர், "செட்டியாரே! இனி நீர் வீட்டிற்குப் போய்
வாரும். இராஜேந்திரசேகரரை நான் அரண்மனைக்கு அழைத்
துப் போவேன். சொல்லியனுப்பினால் வாரும். உமக்கு மெத்த
நன்றி" என்று கூறினர். செட்டியார் இருளனை ஒரு பார்வை
பார்த்துவிட்டு, "வாயை மட்டுந் திறக்காதே" என்று குறிப்பி
னால் கூறிவிட்டுச் சென்றார்.

இராஜேந்திரசேகர (இருள)னை இறைவன் அரண்மனைக்கு
அழைத்துச் சென்றார். இராணியிடம் காட்டி 'பெண்மணி! இவர்
நேபாளதேசத்து மன்னருடைய புதல்வர். தேசயாத்திரையாக
இங்கு வந்திருக்கின்றார். நிரம்பவும் அடக்கமுடையவர். நமது
குழந்தை நாகேஸ்வரியை இவருக்குத் தரலாம் என்று எண்ணு



கின்றேன். உன் சம்மதம் யாது?" என்று கேட்டார். மன்னவன்
-னவி, "மிக்க சந்தோஷம்; இதுபோன்ற அமைதியுடைய
அரசகுமாரனைக் காண்பது அரிது. தங்களுக்கு எது
சம்மதமோ அது எனக்கும் சம்மதம். தங்களுக்குத் தெரியாத
ஆலோசனை என்ன இருக்கின்றது. அப்படியே செய்யுங்கள்.
குழந்தையையும் கேட்டு அதன் சம்மதத்தையறியுங்கள்"
என்றாள்.

மன்னவர் நாகேஸ்வரி வசிக்கின்ற உட்புறத்துள்ள
சிங்கார மாளிகைக்கு இராஜேந்திரசேகரனை அழைத்துச்
சென்றார். அவன் அந்தச் சலவைக் கல்லின்மீது கால் வைக்
கக் கூசி தத்தடியிட்டு நடந்தான். மன்னர் ஏன் அப்படி
நடக்கின்றீர்? தங்கள் மெல்லியபாதம் வருந்துகின்றதோ?
கொஞ்சம் பஞ்சை ஒட்டிக்கொள்ளுங்கள்" என்றார்.

"அம்மா! மகளே! என் தவக்கொழுந்தே! இவர் நேபாள
தேசத்து இளவரசர். இவர் பேர் இராஜேந்திர சேகரர்.
ஆழ்ந்த அறிவும் அடக்கமும் சாந்தமும் உடையவர். இவரை
வணங்கு" என்றார். நாகேஸ்வரி வந்து நாணத்துடன் இருளனை
வணங்கி ஒரு புறம் பூங்கொடி போல் ஒதுங்கி நின்றாள்.
இருளன் அவளை நிமிர்ந்தே பார்த்தானில்லை. அவனுக்கு ஒரே
நடுக்கம். மன்னர் "இவர் பெரிய உள்ளம் படைத்தவர். தேவ
ரம்பை போல் நிற்கின்ற செல்வக் குமாரியைக் கண்டு
இவருடைய மனதிலே ஒரு மாறுபாடும் வரவில்லை" என்று
எண்ணினார். இலட்சுமி கடாக்ஷம் இருப்பதனால் நாகேஸ்வரி
அவனை மணந்துகொள்ள இசைந்தாள்.

திருமணநாள் நிச்சயிக்கப்பட்டது. மன்னருடைய அரண்
மனையை வெகு சிறப்பாக அலங்கரித்தார்கள். மன்னர்
இருளனைப் பார்த்துத் "திருமணத்திற்குத் தங்கள் தந்தையாரை
அழைக்கவேணும். அவருடைய திருநாமம் யாதோ?" என்று
வினவினர். மன்னர் என்ன சொல்லுகின்றார் என்பதனை யறி
யாத அந்த முழு மூடன் இப்படிக் குறுக்கே தலையசைத்தான்.
"தந்தையாரை அழைப்பதில் தங்களுக்கு விருப்பமில்லையாயின்
நான் தங்கள் கருத்துக்கு மாறாக நடவேன்" என்றார் மன்னர்.

அரண்மனைவாசம் சிறைவாசம்போல் இருந்தது இருள
னுக்கு; "செட்டியார் நம்மை இந்த சங்கடத்திற்கு ஆளாக்கி
விட்டாரே! இவர்கள் என்னென்னமோ போடுகின்றார்கள்.
ஒன்றாவது சுவைக்கவில்லையே. எலியைச் சுட்டுத் தின்ன இவர்
களுக்குத் தெரியாதுபோலிருக்கின்றது. இந்த வில்லங்கத்தை
விட்டு வெளிப்படுவதற்கு வழி என்ன? இந்தப் பெண் மினு
கட்டாம் பூச்சிப்போல் இருக்கின்றாளே. நம்மை என்ன செய்
வாளோ?" என்று எண்ணி அஞ்சினான். எங்கும் பாராவினர்
உருவிய வாளுடன் இருப்பதைக் கண்டு மேலும் பயந்தான்.

அவன் மனம் படாத பாடு பட்டது. அவனுக்கு நடக்கும் ராஜோபசாரம் எல்லாம் அவனுக்கு நரக வேதனையாக இருந்தது.

திருமண நாள் வந்தது. அளவற்ற சிறப்புடன் ராஜேந்திர சேகரருக்கும் நாகேஸ்வரிக்கும் திருமணம் நிகழ்ந்தது. வந்தவர்கள் யாவரும் மணமக்களை வாழ்த்தினர்கள். செட்டியார் வந்து மெல்ல பார்த்தார். அவர் மனம் பதறியது. "எந்த நிமிஷத்தில் இது வெளியாகுமோ? அந்த நிமிஷத்தில் நமக்கு நமன் ஓலை வந்து விடும்" என்று ஏங்கினர்.

மன்னர் பெருமான் தன் மனைவியைப் பார்த்து, "பெண்ணரசே! நமது செல்வப் புதல்விக்குத் திருமணம் நடந்து ஒரு திங்களாயிற்று. மாப்பிள்ளை மகளுடன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. இளம் பெண்மணியுடன் இளம் பருவமுள்ள அவர் பேசாமலும், மகளுடன் சிரிக்காமலும், அவளைக் கண்ணெடுத்துக் காணுமலும் இருக்கின்றாரே! என்ன ஆச்சரியம்! புலன்களை வென்ற புண்ணிய புருஷர்போலும்! இயற்கையுங் கடந்த ஏந்தல். சாந்தி கல்யாணம் புரிந்தால் தனிமையில் ஒரு வேளை மகளிடம் பேசி மகிழக் கூடும். ஆகவே அதற்கு ஏற்பாடு செய்ய வேணும்" என்றார். இராணியும் இசைந்தாள்.

நல்ல நாள் பார்த்து படுக்கை அறையை அலங்கரித்தார்கள். சந்தன மரத்தினால் செய்த விலையுயர்ந்த கட்டில்; வெல்வெட்டு மெத்தை. காம்பறிந்த மல்லி மலரும் முல்லை மலரும் அதன் மீது பரப்பிப் பன்னீர் தெளித்து மெல்லிய பட்டு விரித்தனர். பச்சை மணி விளக்குகள் எரிந்தன. சொல்ல முடியாத அளவில் பல அரிய அலங்காரங்கள் அமைந்திருந்தன. நறுமணங் கமழ்ந்தது.

இருளனை முன்னே அந்தத் தனியறைக்கு அனுப்பினர்கள். அவன் சென்று சுற்றுமுற்றும் பார்த்தான். கட்டிலையும் அலங்காரத்தையுங் கண்ணுற்றான். கட்டிலின் கீழே போய்ப் படுத்து அச்சத்தால் நடுங்கிக்கொண்டிருந்தான்.

அழகின் சிகரமாக விளங்கும் இராஜகுமாரி பள்ளியறை சென்று கதவைச் சாத்தித் தாளிட்டாள். கட்டிலின் கீழே மடங்கிப் படுத்திருக்கும் மணவாளனைக் கண்டாள். இவர் ஏன் கட்டிலின் கீழே இப்படி ஒடுங்கிக் கிடக்கின்றார்? ஒரு வேளை என்னை இவருக்குப் பிடிக்கவில்லையா? இவர் பெரிய அறிவாளி யென்று அப்பா கூறினர். ஒரு பாடல் பாடினால் அதைக் கேட்டு இன்புற்று என்னைத் தழுவிக்கொள்வார்" என்று எண்ணினாள். வீணையை எடுத்துச் சுருதிகூட்டினாள்; தனது பவளம் போன்ற மெல்லிய விரலால் மீட்டினாள். தேனினும் இனிய குரலுடன் பாடுகின்றாள்.



கானடா—ஆதி.

மாமயிலேறி வருவாய் வரந்தருவாய்

காமனும் கமலநற் பூமனும் புயல்நிற
மாமனும் வாசவ நாமனும் பணிந்திட [மாமயில்]

வெள்ளிமலையில் மேவும் வள்ளலுக் கொருமொழி
உள்ள பொருளையன்று மெள்ள உபதேசித்த
துள்ளிவரும் வேலனே உள்ளங்கவர் கள்வனே
வள்ளி மணவாளனே பள்ளியறையின்னே [மாமயிலேறி]

இந்த அரிய நாதகானத்தைக் கேட்டு இருளன் மேலும் நடுங்கினன். நாகேஸ்வரியின் பாடலைக் கேட்டு கல்லுங் கரையும். ஆனால் இருளனுடைய மனக்கல் கரையவில்லை. அவள் பாவம் எவ்வளவு நேரந்தான் பாடுவாள்? வீணையை வைத்து விட்டு தன் மணவாளனை மெல்லிய கரத்தினால் மெல்லத் தொட்டாள். "ஐயோ" என்று அலறினன் அவன்.

அவன் குரலைக் கேட்ட அவள் கலக்கமுற்றாள். "இவர் அரசகுமாரராக இருந்தால் தனிமையில் இனிமையாகிய என்னைக் கண்டு மகிழாமல் இருப்பாரா? ஆகவே இதில் ஏதோ மோசம் இருக்கின்றது. செட்டியின் சொல்லை நம்பி அப்பா இந்த மூடசிகாமணிக்கு என்னை மனைவியாக்கிவிட்டார். இந்த மனிதன் சுத்த முழுமூடன் போலும்; மண்ணுங்கட்டியை மாணிக்கம் என்று நம்பி தந்தையார் என் வாழ்க்கையைக் கெடுத்துவிட்டார். பாழுங் கிணற்றிலே என்னைத் தள்ளி விட்டார். அந்தோ! எனது இன்ப வாழ்வில் இடி விழுந்தது; யான் கெட்டேன். இந்த கதி எனக்கு வரும் என்று கனவிலும் கருதவில்லை. என் தாயே! கலைமகளே! வாணி தேவியே! உன்னைச் சதா ஆராதனை புரிந்த எனக்கு இதுவா நீ செய்த அநுக்கிரகம்? அம்மே! அருளன்னையே! பெண்கள் எல்லாவற்றையுந் தாங்கிக்கொள்ளலாம் மூடக் கணவனைத் தாங்க முடியாதே. என் இதயம் வெடித்துவிடும்போல் இருக்கின்றது. இனி என் செய்வது? வாழ்வு குலைந்தது" என்று கூறி அம்பிகையை நினைந்து கண்ணீர் வடித்தாள். காவலரை நோக்கி இவரை எச்சரிக்கையாகப் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு தாங்க ஒண்ணாத வேதனையுடன் வேறு அறையிற் சென்று படுத்தாள்.

நடுநிசி; எங்கும் ஒரே அமைதி. இருளன் மெள்ள எழுந்து சுற்றும் முற்றும் பார்த்தான். "இது நல்ல தருணம். மெதுவாக ஓடிவிடவேண்டும். அப்பா! எலிவேட்டையாடி எத்தனை நாள் ஆய்விட்டது. நான் இந்தச் சிறைக்குள் வந்து அகப்பட்டுக் கொண்டேன். செட்டியார் நம்மைக் கெடுத்துவிட்டார். எல்லோரும் நன்கு உறங்குகின்றார்கள். ஆகவே இந்த சமயந்

கானடா பாடினாயே? அது 29 மேளகர்த்தாவில் பிறந்த ஜன்ய ராகம் ஆயிற்றே. அதன் வர்க்கம் என்ன? அது எந்தநேரத்தில் பாடத்தக்கது? "மாமயில் ஏறி வருவாய்" என்று பல்லவி பாடினாயே? மயிலின் தத்துவம் உனக்குத் தெரியுமா? முருகன் என்ற சொல்லின் பொருளை நீ உணர்வாயா?" என்று வினாமாரி பொழிந்தான். நாகேஸ்வரி நடுங்கி நாயகன் நளின பாதத்தின் மீது வீழ்ந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டாள். இராஜேந்திர சேகரன் வீணையை எடுத்து இரும்புங் கல்லும் உருகுமாறு கரும்புந் தேனும் கலந்ததுபோல் பாடினான். அப் பாடலைக் கேட்டு நாகேஸ்வரி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். வீணையை வைத்துவிட்டு நாகேஸ்வரியை அருகில் இருத்தி அநேக தத்துவங்களையும் நாதவித்யா மர்மங்களையும் நவின்றான்; இருவரும் ஈருடம்பு ஓருயிராக ஒன்றி இன்புற்றார்கள். நாகேஸ்வரி தனக்கு ஞானசேகரனாகிய நாயகன் அமைந்ததை எண்ணி உள்ளம் உவந்தாள். தனது உபாசனாமூர்த்தியாகிய நாமகளுக்கு நன்றி செலுத்தினாள். பொழுது புலர்ந்தது. கணவனுடைய இன்பத்தில் மதுவுண்ட வண்டுபோல் மகிழ்ந்திருந்தாள்.

மன்னவனும் மன்னவன் மனைவியும் மகளை நோக்கி, "அம்மா! உன் கணவன் ஊமைபோல் ஒன்றும் பேசாமல் இருக்கின்றாரே? இரவு உன்னுடன் பேசி மகிழ்ந்தாரா?" என்று வினாவினார்கள்.

நாகேஸ்வரி தாய்தந்தையரை நோக்கி, "அம்மா! அப்பா! அவர் ஒரு தெய்வப் பிறப்பு. கலாநிதி. வித்தையில் கரை கண்டவர். வீணை வாசிப்பதில் சமானமில்லாதவர். பேச்சில் பெருங்கொண்டல். குணக்கடல். யான் முற்பிறப்பில் செய்த தவம் அவர் எனக்குக் கணவனாக வாய்த்தார். அவருடைய பெருமையும் கல்வியின் அருமையும் அளவிட முடியாதவை" என்றாள். அதுகேட்ட அவர்கள் பெரிதும் மகிழ்ச்சியுற்றார்கள்.

மன்னவன் தன் மருமகனுக்கு மகுடாபிஷேகம் புரிந்தான். இராஜேந்திர சேகரன் செட்டியாரை அழைத்து நிதியும் ஆடையும் வழங்கி ஆதரவு செய்தான். அவனுடைய கல்வித்திறத்தைக் கண்ட செட்டியார் அதிசயமுற்றார். மிக்க திறமையுடன் நீதி நெறி வழுவாது நியாயத்தை வழங்கி மக்களுக்கு நல்லறிவைப் புகட்டி அரசு புரிந்தான் இராஜேந்திரசேகரன். நாகேஸ்வரி நல்லறமாகிய இல்லறத்தில் குன்றாத இன்பத்துடன் இனிது வாழ்ந்தாள்.



உ

முருகா

# காளத்தி முதலியார்

நமது பாரத நாட்டில் உத்தமபத்தினிகளும், தத்துவஞானிகளும், அள்ளிவழங்கிய கொடை வள்ளல்களும், புவிமன்னர் போற்றும் கவிமன்னர்களும் அநேகர் இருந்து அணிசெய்தார்கள். இதனால் பாரதபூமி பொன்றாத புகழ் பெற்றது. இந்த வரிசையிலே ஒருவர் நின்றையூர் வள்ளல் **காளத்தி முதலியார்.** அவர் கொடைத்திறம் மிக்க உயர்ந்தது. அவரைப்பற்றி அன்பர்கள் அறிந்து மகிழ்வார்களாக.

சென்னைக்கு மேற்கே திருநின்றையூர் என்ற ஒரு தலம் உளது. இப்போது அது தின்னனூர் என வழங்கப்படுகின்றது.

அத்தலத்தில் வேளாண் மரபில் காளத்தி முதலியார் என்பவர் ஒருவர் பெருந்தனவந்தராக வாழ்ந்தார். தனமும் நன் மனமும் படைத்தவர். வாரிவழங்கும் வள்ளல். கரும்பையும் வெல்லத்தையும் நாடி எறும்புகள் வருவதுபோல் பல வறியவர்கள் வந்து வந்து செல்வம் பெற்று வறுமை நோய் தீர்ந்து மகிழ்ச்சியுற்றார்கள். அவரிடம் வாடி வந்தவர்கள் மலர்ந்து நலம் பெற்றார்கள். "ஈவார்மேல் நிற்கும் புகழ்" என்ற வள்ளுவர் திருவாக்கின்படி அவர் புகழ் தமிழகம் முழுவதும் பரவியது.

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதியம் இல்லை உயிர்க்கு.

என்ற பொதுமறைக்கு அவர் இலக்கியமாக இருந்தனர்.

இங்ஙனம் அவர் புகழ் பரவியது. அந்நாள் காஞ்சிமாநகரை யரசுபுரிந்த பல்லவன் அது கண்டு அழுக்காறு கொண்டான். "ஒரு தனி மனிதன் புகழ் மன்னவன் புகழை வென்றுவிட்டதே" ஆகவே இதற்கு என்ன செய்யலாம் என்றும், அவர் புகழுக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும் என்றும் எண்ணினான்.

தனது அமைச்சர் முதலியோரை யனுப்பி காளத்தி முதலியாருடைய திருமாளிகையிலுள்ள பொன், பொருள், பாத்திரம், பண்டம், ஆடை, அணிகலன் ஆகிய அனைத்தையும் பறிமுதல் புரிந்துவிட்டான். மன்னவனுடைய ஆட்கள் வந்து அறநெறி வழுவி பலாத்காரமாக இவ்வாறு செய்ததைக் கண்டு வள்ளல் வருந்தினார். இதுவுந் திருவருள் என்று ஆறுதல் அடைந்தார்.



"கடவுளே! கருணைக்கடலே! ஒரு குற்றமும் புரியாத என்னுடைய செல்வத்தைக் காரணங் கூறாமல் பறித்துக் கொள்வதும் ஒரு அரசியல் முறையா? இது தருமமா? தண்ணளியாகுமா? என்னே கொடுங்கோல்? இனி என் பால் வந்து யாசிப்பவர்க்கு யான் என் செய்வேன்? வறியார்க்கு வழங்குவதற்குரிய செம்பொருள் அத்தனையும் போய்விட்டதே. அந்தோ? அநீதி; அநீதி. இனி நாம் இந்த ஊரில் – இந்த வீட்டில் இருப்பது கூடாது. உள்ளம் உலைந்து வருந்தி வந்து கேட்பவர்க்கு இல்லையென்று கூறி இங்கிருக்கலாமா? ஆகவே எங்காவது முகமறியாத அயல் நாடு சென்று கூலி செய்து வாழ்வோம்" என்று எண்ணினார்.

மனைவியுடன் வீட்டைவிட்டுப் புறப்பட்டார். அன்று பகல் முழுவதும் நடந்தறியாத அவர்கள் நடந்தார்கள். பசி தாகத்தால் பரதவித்தார்கள். இன்பத்தின் சிகரத்தில்வாழ்ந்த அவர்கள் துன்பப் படுகுழியில் வீழ்ந்துவிட்டார்கள். எங்கும் யாசித்துப் பசியாற மனம் இடந்தரவில்லை. இருட்டியது. பசி காதடைத்தது. தாங்கள் கட்டிய சத்திரம் ஒன்று எதிர்ப்பட்டது. அதில் போய் காளத்தி முதலியாரும் அவருடைய வாழ்க்கைத் துணைவியாரும் தங்கினார்கள். அந்த நிலையில் அவருக்கு உறக்கம் வருமா? தங்கள் நிலைமையை நினைந்து நினைந்து சிந்தை நொந்து வெந்திருந்தனர்.

அதே சத்திரத்தில் ஒரு புலவர் வந்து தங்கியிருந்தனர். புலவருக்கு வறுமை நோய்; அதனால் அவர் பன்னெடுங்காலம் பரதவித்துக்கொண்டிருந்தார். வறுமையால் மிகுந்த ஏக்கம்; அதனால் வரவில்லை தூக்கம். அப்புலவர் காளத்தியாரை நாடி வந்து கொண்டிருக்கின்றார். திருநின்றையூர் சென்று முதலியாரைக் கண்டு தன் வறுமைப் பிணியை யகற்றும் பொருட்டு வருகின்றனர். வருகின்ற வழியில் அச் சத்திரத்தில் தங்கினார்.

நெருப்பினுள் துஞ்சலு மாகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

என்கின்றார் திருவள்ளுவர். நெருப்பில் படுத்து உறங்கினாலும் உறங்கலாம்; வறுமையில் கிடந்து உறங்க முடியாது என்பது இதன் பொருள். ஆகவே அப் புலவர் நொந்து வெந்து புண்பட்ட மனதுடன் துள்ளித் துடித்துக் கொண்டிருந்தனர்; பாவம். கந்தல் வேட்டி; ஒட்டிய வயிறு; குழிந்த கண்; உலர்ந்த வாய்; புலர்ந்த முகம்; மெலிந்த உடம்பு.

இந்த நிலையில் அவர் தனக்குத் தானே பேசிக் கொள்ளுகின்றார். "ஏ தரித்திரமே! நீ என்னை விட்டுப் பிரியாமல் உடம்பை விட்டுப் பிரியாத நிழல்போல தொடர்ந்து வாட்டினாய்;

நெடுங்காலமாக என்னைப் பிடித்து அல்லல் படுத்துகின்றாய். ஆனால் உன் கொட்டம் நாளை அடங்கிவிடும். நாளை நான் திருநின்றையூரில் செல்வச் சீமானாக வாழும் வள்ளல் காளத்தி முதலியாரிடம் போனால் வறுமையே! நீ என்னை விட்டுப்பிரிந்து போய்விடுவாய்; பிறகு என்னிடம் ஒருகணம் இருக்க முடியாது. எனக்கு அவர் ஆயிரம் ஆயிரம் பொன் தருவார்; பட்டாடை தருவார்; ஆபரணங்கள் தருவார்; மாடுகள் நிலபுலங்கள் எல்லாம் தருவார், நான் லட்சாதிபதியாக ஆவேன். அப்போது தரித்திரமே நீ எங்கே? நான் எங்கே? இன்று ஒரு இரவு தானே. என்னுடன் இருந்துவிட்டுப் போ" என்ற கருத்துக்களையுடைய இந்த வெண்பாவைத் திரும்பத் திரும்பப் பாடிக்கொண்டிருந்தார்.

நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழல்போலே
நாளைக் கிருப்பையோ நல்குரவே—காளத்தி
நின்றையூர் சென்றக்கால் நீயெங்கே நானெங்கே?
இன்றைக்குச் சற்றே யிரு.

புலவர் பாடிய வெண்பாவை மற்றொருபுறம் இருந்த காளத்தி முதலியார் கேட்டார். அப்போது அவர் மனம் என்ன பாடு பட்டிருக்கும்? "பெண்ணே! இப்புலவர் பாவம்! வறுமையால் வாடுகின்றார் போலும்! நம்மை நாடி வருகின்றார். நாளை நம்மிடம் வந்தவுடன் வறுமை யகன்றுவிடும் என்று முழு நம்பிக்கையுடன் வறுமையை முன்னிலைப் படுத்தி இவ்வெண்பாவைப் பாடுகின்றார். இத்தகைய இவர் நமது ஊருக்குப் போனால் ஏமாந்து போவார். அங்கு ஆள் இல்லை யென்று சொல்லக் கூட ஆள் இல்லை. ஆகவே நாம் நமது வீட்டிற்கே போவோம். இவர் வந்தவுடன் இவரைப் பார்த்து இவருடைய துன்பத்தில் நாமும் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறினார். விடியற்காலை புறப்பட்டார். கடு நடையாக நடந்து புலவருக்கு முன் திருநின்றையூர் வந்து தங்கள் மாளிகையைச் சேர்ந்தார்கள். சேர்ந்து புலவர் வந்தால் என்ன சொல்வது? புலவர் பொருள் கேட்பாரே? இல்லை என்றால் அவர் மனம் உடைந்து போகுமே? என்று பெருங் கவலையுடன் இருக்கின்றார்கள்.

அங்கே புலவர் காலையில் எழுந்தார். "என்னை வாட்டி வதக்கிய வறுமையே! இன்னும் சிலமணி நேரத்தில் நீ என்னை விட்டுக் கம்பி நீட்டப் போகின்றாய். உனக்கு ஆயுள் முடிந்தது. இதோ போகின்றேன் திருநின்றையூருக்கு. வள்ளல் பெருமானைக் காண்பேன். வாரிவழங்குவார். குபேரனாகப்போகின்றேன்" என்று கூறிக்கொண்டே வந்தார். காளத்தி முதலியாரைக் கண்டார். "அண்ணலே! அடியேன் அருந் தமிழ்ப் புலவன்.



மிக்க வறுமையால் துக்கமுற்று வந்தேன். தக்க தருமசீலராகிய தங்களை யடைந்தேன். இனி எனக்கு ஒரு குறையுமில்லை" என்றார்.

முதலியார் அவரை அன்புடன் இன்முகங் காட்டி வரவேற்றார். "வாருங்கள்; இருங்கள்" என்றார். அவர் மனம் அப்போது என்ன பாடுபட்டிருக்கும்; அதனை ஆரால் அளக்கமுடியும்?

"சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை"

என்கின்றார் தெய்வப்புலவர்.

மனிதனுக்கு மரணத்தைக் காட்டிலும் கொடியது யாதொன்றுமில்லை. ஆனால் வள்ளல்களுக்கு வழங்க முடியாத போது மரணந் தித்திக்குமாம். ஆதலால் காளத்தி முதலியார் உயிரை மாய்த்துக்கொள்ள நினைத்தார். வீட்டிற்குப் பின் புறத்தையடைந்தார். அங்கு ஒரு புற்று; அதில் ஒரு நல்ல நாகம் வாழ்கின்றதென்பதை அவர் அறிவார். அரவந் தீண்டி ஆருயிர் பிரியட்டும் என்று எண்ணினார். புற்றில் கையை விடுத்தார். அரவம் சீறி வந்தது. அள்ளிக்கொடுத்த வள்ளல் கைக்கு நஞ்சையா நல்குவது என்று எண்ணியது. தன் தலையில் உள்ள நாகரத்தினத்தை நல்கியது. வள்ளல் வீட்டுப் பாம்புக்கும் இந்த நற்குணம் அமைந்திருந்தது.

நாகரத்தினத்தைக் கொணர்ந்து புலவர்பால் நீட்டினார் முதலியார். புலவர் அளவற்ற மகிழ்ச்சியுடன் பெற்றார். "ஆ! ஆ! என்ன அன்பு? என்ன கருணை? பொன்னையும் பொருளையும் நிரம்பத் தந்தால் சுமந்து போவது கடினம் என்று கருதி கருணையுடன் உலகத்தை விலைமதிக்கும் இந்த நாக மாணிக்கத்தை நல்கினார். வள்ளலே வாழி; நீடூழி வாழி" என்று வாழ்த்தினார். நாகரத்தினத்தை எடுத்துக்கொண்டு மீண்டார்.

அம் மாணிக்கத்தைச் சாமானியமானவர் விலைக்கு வாங்க முடியாதல்லவா? காஞ்சிமா நகரை யாளுகின்ற பல்லவ மன்னவன்பால் சென்றார். நாகரத்தினத்தை அவன் முன் வைத்தார். "மன்னர் பெருமானே! உலகிலே எத்துணைச் சீமான்கள் இருக்கின்றார்கள். இருந்து என்ன பயன். எட்டி பழுத்து யாருக்கு என்ன பயன்? ஆ! ஆ! திருநின்றையூர் காளத்தி முதலியாரைப் போலே ஒரு புண்ணியமூர்த்தி யுண்டா? கொடை வள்ளல். காலையிலே சென்றேன். இந்த மாணிக்கத்தை அம் மனித மாணிக்கம் தந்தார். மதிப்பிட்டு விலையைத் தாரும்" என்றார்.

பல்லவன்கேட்டு அதிசயமுற்றான். நாணமும் அடைந்தான். "மந்திரிமார்களே! நீங்கள் முதலியாரிடம் பறிமுதல் சரிவரச் செய்யவில்லை போலும். இதோ பாருங்கள் இவருக்கு அவர் இம் மாணிக்கத்தைத் தந்தனர். இன்னும் எத்தனை மாணிக்கம்